*Tenral*

*Malar 4, ital 7*

*August 17, 1957*

Record no. 947

தென்றல்

மலர் 4 :: 17-8-57—சனி :: இதழ் 7

தென்றல்

தென்றல்

ஆசிரியர்: கண்ணதாசன்

# தென்றல்



# தமிழில் வெளிவந்த முதல் நாவல்

"...முதலியார் மிக நல்லவர். குணவான்; குடும்பத்தின் தலைவர். அப்பப்பா அவருக்கு வந்த தொல்லைகள், துயரங்கள் கொஞ்சமா? உண்மையிலேயே அவருடைய சரித்திரம் என்னை வாட்டிவிட்டது. இருந்தாலும் ஒரு மனிதனுக்கு இப்படியா சோதனைக் காலம் வருவது?... ச்சு!... ச்சு!... ச்சு!!" என்று ஒவ்வொரு தமிழரும் கண்ணீர் வடிக்கக்கூடிய அளவுக்கு 'பிரதாப முதலியார் சரித்திரம்' தமிழர்களுக்குத் தரப்பட்டது. பிரதாப முதலியார் சரித்திரமா? அவர் எந்த ஜில்லாக்காரரர்?

ஒரு நாவலின் முக்கிய பாத்திரமாக வருபவரின் பெயர், உண்மையாகவே தமிழ் நாட்டில் பிறந்து வளர்ந்து காலமானவரைப்போல் மக்கள் அனைவரும் எண்ணும்படி புகழைத் தேடிக் கொண்டிருக்கிறதென்றால் அந்த நாவலுக்கு என்னென்ன தனிச் சிறப்புக்கள் இருக்கவேண்டும்? 'பிரதாப முதலியார் சரித்திரம்' என்று அதை எழுதிய ஆசிரியர், தலைப்பிட்டிருக்கிறாரேயன்றி, அந்தச் சரித்திரத்தைப் படித்தவர்கள் அனைவருமே, பிரதாப முதலியாரைக் கதா பாத்திரமாகக் கருதுவதில்லை. இராமாயணத்தில் ராமனும், பாரதத்தில் தர்மனும் தெய்வங்களாகக் கருதப்படுவதுபோல் பிரதாப முதலியார் தமிழ்க் குடும்பங்களின் பாட்டனாகவே மதிக்கப்படுகிறார். நாவலின் கதா பாத்திரத்திற்கு, என்றும் அழியாத உயிர்ச் சத்தினைக் கொடுத்து தன்னுடைய சிறப்பியல்புக்கும் 'சிரஞ்சீவி'ப் பட்டம் சூட்டிக்கொண்ட பெருமை காலஞ் சென்ற பெருந்தகை **மாயூரம் வேதநாயகம் (பிள்ளை)** அவர்களையே சாரும்.

'பிரதாப முதலியார் சரித்திர'த்திற்கு—அதை எழுதிய வேதநாயகம் பிள்ளைக்கு கிடைத்திருக்கும் பெரும்புகழ், அதுதான் முதல் நாவல், என்பதற்கும்

— 8-ம் பக்கம் —

Best copy available.

பாராட்டுக் கட்டுரை-1.
சென்ற இதழில் குறிப்பிட்டிருந்தபடி 'இல்லை இல்லை ரஷ்யா ஏகாதிபத்திய நாடுதான்' என வாதிக்கிருக்கும் கட்டுரையை இந்த இதழில் பிரசுரிக்கிருேம். அடுத்த இதழில், ''யார் சொன்னது? ரஷ்யா முற்போக்குச் சக்திதான்'' என்று வாதிக்கிருர் வேருெருவர்.

# இல்லை! இல்லை!

# ஏகாதிபத்திய நாடுதான்!

— எழுதியவர் —
**வேலை. எஸ். எழில்**

ஏகாதிபத்திய ஆசை-அந்தத் தணியாத வெறி, ஜனநாயகத்தின், குடியாட்சியின் குறைப் பிரசவமோ எதிர்நிலைப் பிரசவமோ அல்ல. எதிர்மாருக முடிமன்னர்களின் நீண்ட தொடர் அபிலாஷையாக, தணிக்க முடியாத 'விரகதாப'மாக இருந்து வந்திருக்கிறது.

சீசர் காலத்திய ரோம சாம்ராஜ்யம், அலெக்ஸாண்டரின் உலகப் படையெடுப்பு, நெப்போலியனின் வெற்றி முழக்கங்கள், ஜார் பரம்பரையின் ஆதிக்க வெறி, பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் ஆதிபத்தியத் தொடர், சோழ ஏகாதிபத்தியம் போன்ற ஆட்சிகள் வரலாற்றுத் துணையோடு - ஏகாதிபத்தியத்தின் பிறப்பு, வளர்ப்பு - வாழும் முறைகள் தெரியவருகின்றன.

முடியாட்சியால் மட்டும்தான் ஏகாதிபத்தியம் எழுச்சியோடு கோலோச்சுகிறது என்று முடிவு செய்துவிடுவதற்கில்லை. தடியாட்சியின், அதாவது சர்வாதிகார ஆதிக்கப் பித்தர்களாலும் ஏகாதிபத்தியம் சாகாமல் வாழ்கிறது. ஹிட்லர், முசோலினி முதலியோரின் ஏகாதிபத்திய ஆர்ப்பாட்ட ஆதிக்கத்தை இருபதாம் நூற்ருண்டு மக்களாகிய நாம் மறந்துவிட நியாயமில்லை.

ஏகாதிபத்திய வெறி முடிமன்னர்களின் அபிலாஷையாக இருந்து, சர்வாதிகாரிகளின் சாகாத ஆசை ஆசைகொண்டிருந்தார் என்பதல்ல வாதம். நேற்று முதல் இன்றுவரை சோவியத் ரஷ்யாவை ஆண்டவர்கள்-ஆள்பவர்கள் எல்லாம் ஏகாதிபத்திய நோக்கத்தோடுதான் ஆட்சி நடத்துகின்றனர். ஸ்டாலின் செய்துபோன ஆதிக்க ஆதிபத்தியத்தைக் கட்டிக் காப்பதில் ரஷ்ய சர்க்கார் கண்ணும் கருத்துமாய் பணியாற்றுவது கண்கூடாகும்.

ரஷ்ய ஆதிக்கத்தை 'இரும்புத் திரை' ஆதிக்கம் என்ற அடைமொழியோடு அழைப்பது உலகறிந்த உண்மையாகும். ரஷ்யாவின் ஏகாதிபத்திய இரும்புத்திரை வளைத்துப் பின்னிக்கொண்டுள்ள பிரதேசங்கள், அல்பேனியா, பல்கேரியா, ருமேனியா, அங்கேரி, செக்கோஸ்லவேகியா, போலந்து, லிதுவேனியா, லாட்வியா, எஸ்டோனியா, கிழக்கு ஜெர்மனி முதலியனவாகும். இந்நாடுகள் சுதந்திர தேசங்கள் என்று பெயரளவில் அழைக்கப்பட்டாலும், ரஷ்யாவின் ஆதிபத்திய பகடைக்காய்கள் தான் இவைகள். மேற்படி நாடுகளின் வரலாற்றை ஆராய்வோமாயின் ரஷ்ய ஆதிபத்தியத்தின் சொரூபம் தெள்ளிதின் தோற்றும். அங்கேரி, போலந்து ஆகிய தேசங்களைரஷ்யா சமீபத்தில்படுத்தியபாடு பரிதாபகரமான செயல்களாகும்.

தெற்கே கருங்கடலிலிருந்து கைப்பற்றி கோலோச்சினர். 1913ல் லண்டனில் கூடிய வல்லரசுகள் மாநாடு அல்பேனியாவை சுதந்திர நாடாகப் பிரகடனப்படுத்தியது. ஆனல், 1914-ல் இத்தாலிய துருப்புக்கள் அல்பேனியாவை ஆக்கிரமித்துக்கொண்டன. 1925ல் குடியரசாக முகிழ்த்தது. 1939ல் முசோலினியின் கைக்குள் சிக்கியது. 1943ல் இத்தாலி நேச தேசங்களிடம் சரணடைந்தபோது, பரிதாபத்திற்குரிய அல்பேனியா ஜெர்மன் வசம் பிடிபட்டது.

முசோலினி, ஹிட்லர் போன்ற மிகப் பெரும் சர்வாதிகாரிகளின் ஆளுகைக்கு உட்பட்ட அல்பேனியா, இறுதியாக மாபெரும் சர்வாதிகாரி ஸ்டாலினின் இரும்புத் திரைக்குள் 1948ல் அடங்கிவிட்டது. ஆண்டுக் கணக்காக அடிமைப்பட்டுக் கிடந்த அல்பேனியா, முடிவாக ரஷ்ய ஏகாதிபத்தியத்தில் ஐக்கியமாகிப் போனது. சுதந்திர வரலாற்று நூலில் அல்பேனியாவின் அத்தியாயம் சோகம் கப்பியதுதானே!

அடுத்து போலந்தையும், அங்கேரியையும் மட்டும் கவனிப்போம். சில மாதங்களுக்கு முன்பு இந்நாடுகளில் நான்கு முறிய சுதந்திர செஞ்சங்கள் வெடித்தன. இவைகளை குறிப்பாக உணர்தல் அவசியமன்றே!

வதைப் பட்டது. எதிரிக்கு எதிரி நண்பன் எனும் சித்தாந்தத்தை உதிரத்தில் கலந்துள்ள ரஷ்யா- அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ் இவைகளுடன் நேசதேச ஒப்பந்தம் செய்து கொண்டது. ஜெர்மன் முறியடிக்கப்பட்டது. பாகம் போடப்பட்டிருந்த போலந்து, முழுதுமாக ரஷ்யாவின் வசம் வந்தது. எத்தனையோ நூற்ருண்டுகளாக சுதந்திரத்திற்காகப் போராடி வந்த போலந்தை, ரஷ்ய ஏகாதிபத்தியம் தனக்கு சாமரம் வீச வைத்துக் கொண்டது.

போலந்து மக்கள் சுதந்திரத்தை இழந்துவிட்டனர். ஆனல் அவர்களை மகிழ்விக்காத சுபிட்சம் எங்கும் பொங்குவதாக ரஷ்யா சொல்லிற்று. கம்யூனிஸ்ட் ஆட்சி ஆழ வேரூன்றலானது. கம்யூனிஸ்டுகளிலேயே தாயகத்தின் தன்மானத்தையும், சுதந்திரத்தையும் காப்பதில் முன்னின்ற தலைவர்களில் சிறந்தவர் கோமுல்கா என்பவர். போலந்தை தன்னிச்சையோடு இயங்கவைக்க முயன்ற அத்தலைவனை -ரஷ்ய சர்க்கார் சிறைப்பிடித்தது. ஸ்டாலினின் மரணத்திற்குப்

# பதவிப் பித்தால் ட்ராட்ஸ்கியைக் கொன்ருர்கள்!

யாக மாறி, கட்சியின்-அதன் தலைவனின் ஏகோபித்த அனுபவ உரிமையாக உருமாறி வந்திருக்கிறது. ஏகாதிபத்தியத்தை - அந்தத் தன்மையை விரும்பி ஏற்று செயல்படுத்தும் கட்சி எது? தலைவன் யார்?

உலகம் சாதாரணமாக 'நாளை வரை' பேசும் அந்தக் கட்சி-அகில உலக ரஷ்ய பொதுவுடைமைக் கட்சியாகும்! சர்வாதிகாரியாக வாழ்ந்து தன் ஆதிபத்திய ஆசையை நிறைவேற்றிய தலைவன் ஸ்டாலின்!

சர்வாதிகாரத்தை - ஸ்டாலின் ஆதிக்கத் தன்மையை சொல்லின் செல்வர் சம்பத் அவர்கள் வெகு விளக்கமாக விமர்சிக்கிருர்: ''ஸ்டாலின் ஒரு சர்வாதிகாரி என்ற முறையில்-சமீப காலத்தில் வாழ்ந்த மிகப் பெரிய சர்வாதிகாரி என்ற நிலையில் தனக்குத் தோன்றியபடியெல்லாம் சென்ருர். தவறுகள் இழைத்தார். ஆனல், அதை குருஷ்சேவ் போன்ருேர் அப்போதே கண்டிக்க முடியாமற்போய்விட்டது. அது அந்த அரசு முறையின் கோளாறினல்தான்.''

சர்வாதிகார ஆட்சிமுறையின் தன்மையே, தலைவன் தவறு செய்தாலும் எடுத்துக்காட்டவோ, கண்டிக்கவோ முடியாத ஒன்ருகும். அங்கிலையில் அவன் இட்டதே சட்டம்தான். அவன் ஆசைகள்தான் திட்டங்கள். ஸ்டாலின் மட்டும்தான் சர்வாதிகாரத் தோரணையில் ஆதிபத்திய

வடக்கே ஆர்ட்டிக் சமுத்திரம் வரையில் சுமார் 3500 மைல் தூரத்துக்கு ரஷ்யாவின் இரும்புத் திரை ஆதிக்கம் வியாபித்திருக்கிறது. இந்த ஆதிபத்திய விஸ்தரிப்பை உற்றுநோக்குவோமாயின், பண்டைய ஜார் சக்ரவர்த்தியின் ஏகாதிபத்திய சாம்ராஜ்யத்தைக் காட்டிலும் - இன்றைய சோவியத் ரஷ்யாவின் ஏகாதிபத்தியம் மிக மிகப் பெரியது என்பது புரியும்.

ரஷ்யாவின் இரும்புக்கரங்களில் சிக்கியுள்ள நாடுகளின் சுதந்திர வரலாறே சோக மயமானது. ஒரு சில நாடுகளின் வரலாற்றைக் கண்ணுறுவோம். இறுதியாக அவை ரஷ்யாவின் பிடியில் சிக்கியதையும் அறிவோம்.

அல்பேனியா - சின்னஞ்சிறு நாடு அது. பண்டைய காலத்தில் அல்பேனியாவை 'இலரியா' என்ற பெயரில் அழைத்துவந்தனர். அல்பேனிய மொழியில் இலரியா எனும் வார்த்தைக்கு 'சுதந்திரம்' என்று பொருளாம். சுதந்திரம் என்று சொல்லையே தன் பெயராகக் கொண்ட அல்பேனியாதான் தொடர்ந்து 2000 ஆண்டுகள் அடிமையாக வாழ்ந்தது வியப்பளிக்கிறதல்லவா?

கிறிஸ்துவுக்கு 200 ஆண்டுக்கு முன் அல்பேனியாவை ரோமியர்கள் அடிமை கொண்டனர். பிறகு ஸ்லேவியர்கள் ஆதிக்கம் செலுத்தலாயினர். அடுத்துத் துருக்கியர்

இரண்டாம் மகாயுத்தத்தில் போலந்தின் நிலை படுமோசமாகியது. முதலாளித்துவத்தில் மட்டுமே ஏகாதிபத்திய வெறி தோன்றும் என்று சொல்லும் சோஷியலிஸ சோவியத் ரஷ்யாதான் 1939-ல் போர்வெறியன், இருபதாம் நூற்ருண்டின் ஈடு இணையற்ற இரக்கமற்ற அரக்கன் எனப்பட்ட இட்லரோடு நேசதேச ஒப்பந்தம் செய்துகொண்டது. அதன் பலன் போலந்து ஆக்கிரமிக்கப்பட்டது. ஜெர்மனியும், சோவியத் ரஷ்யாவும் ஓநாய் நாக்குகளோடு போலந்தை பங்குபோட்டுக் கொண்டன. பரிதாபத்திற்குரிய போலந்து பேந்தப் பேந்த விழித்தது. ஆண்டாண்டுக் காலமாக ஜெர்மன், ஆஸ்திரியா போன்ற நாடுகளின் ஆதிக்கத்திற்கு அடிமையாகக் கிடந்த போலந்தை- அது தலையெடுத்து வரும் சமயத்தில் ஜெர்மன்-ரஷ்ய கூட்டு அச்சு பங்கு போட்டுக் கொண்டன. போலந்து மக்களின் பிறப்போடு பிறந்த சுதந்திர உணர்ச்சி நசித்துப் போகவில்லை. போலந்து தலைவர்கள் சளைக்கவில்லை. தற்காலிகமாக லண்டனில் சர்க்காரை அமைத்து போலந்தை ஆட்சி செய்யலாயினர்.

1941-ல் ஜெர்மன்-ரஷ்ய நேசதேச உறவுகள் காற்றில் பறந்தன. ஜெர்மன் தன் ராட்சச பலத்துடன் ரஷ்யாவை நேரடித் தாக்குதலில் தாக்கலானது. இரு நாடுகளுக்கும் இடையில் சிக்கிய போலந்து சித்திர

பிறகு கோமுல்காவுக்கு விடுதலை கிடைத்தது.

விடுதலை வீரன் கோமுல்காவின் வசம் போலந்து சர்க்கார் வந்தது. ரஷ்ய ஆதிபத்தியத்தை எதிர்த்து போர்க்கொடியேந்தினன். போலந்தும் பொங்கியெழுந்தது. ரஷ்யாவின் புதுத்தலைவர்கள் மிரட்டினர். மருண்டு சுருண்டு போகவில்லை போலந்து அரசாங்கம். ரஷ்ய ஏகாதிபத்திய காவலர்கள் போலந்துக்கு ஓடோடி வந்தனர்; கோமுல்காவைக் கண்டனர். வார்சாவில் தலைவர்கள் சந்தித்துப் பேசினர். கோமுல்காவை அதட்டிப் பயனில்லை என்பதை அறிந்த ரஷ்யத் தலைவர்கள் சமரசம் பேசினர். ரஷ்ய ஏகாதிபத்தியத்திலிருந்து போலந்து விடுபடாத விதத்தில் ஒப்பந்தங்கள் செய்து கொண்டனர். கெஞ்சுபவனை மிஞ்சுவர், மிஞ்சுபவனை கெஞ்சுவர் ஏகாதிபத்திய காவலர்கள்.

போலந்துப் புரட்சி அடங்கி புகைமூட்டம் கலைவதற்குள்ளாகவே அங்கேரியில் கொந்தளிப்பு நிகழலானது. ஒரு நூற்ருண்டுக்கு முன்பு அங்கேரியில் — அதாவது 1848-ம் ஆண்டு — பெரும் புரட்சி ஒன்று நடைபெற்றது. அப்புரட்சி ஆஸ்திரிய சாம்ராஜ்ய ஆதிக்கத்தை எதிர்த்து ஒழிக்க எழுந்தது. அப்புரட்சியை அடக்கி ஒடுக்க ஆஸ்திரிய ஆதிக்கத்தால் ஆகவில்லை.

— 11-ம் பக்கம் —

# உதவிசெய்த யகோதாவை அழித்தார்கள்!



'' போற்றுபவர் போற்றட்டும்; புழுதி வாரித் தூற்றுபவர் தூற்றட்டும்; தொடர்ந்து செல்வேன் ஏற்றதொரு கருத்தை என(து) உள்ளம் என்ருல் எடுத்துரைப்பேன் எவர்வரினும் நில்லேன்: அஞ்சேன்!''

# எண்ணம்

~ கண்ணதாசன் ~

மலர் 4 ‖ 17—8—57 ‖ இதழ் 7

## அறிக்கை வந்தது அறிக்கை!

''அரசாங்க மொழியாக இந்தி வேண்டும்
அத்தனையும் இந்தியிலே மாற வேண்டும்
பெருநீதி மன்றத்தின் செயல்கள் யாவும்
பிறழாமல் இந்தியினில் அமைதல் வேண்டும்
உருவான பிற 'லிபி'யை அழித்தல் வேண்டும்
ஒன்ருக மாநிலங்கள் வாழ வேண்டின்,
மறைதேவ நாகரியின் 'லிபி'யைக் கொண்டே
மாநிலத்து மொழியெல்லாம் வரைதல் வேண்டும்!

இந்தியினை அறிவோர்க்கே பதவி யெல்லாம்!
இல்லாதார் இல்லாரே!'' என்ப தாக
விந்தியத்தின் வடக்கிருந்து தெற்கை ஆளும்
'வீர'ரெலாம் அமைத்ததுகுழு முடிவு கூறி(ச்)
சந்தியிலே விட்டடதா தமிழை, தெற்கில்
தடம்போடும் மலையாளத் தேனை, தென்னர்
பந்தலுக்கு அழகூட்டும் தெலுங்கை தங்கப்
பழம்போலும் கன்னடத்தைத் துளுவை யெல்லாம்!

'வட்'டென்றும் 'சுட்'டென்றும் வடித்தெ டுத்தே
வழங்கிவரும் எழுத்தெல்லாம் மறைவ தற்கோ
ஒட்டுறவு கொண்டாய்நீ வடவர் பாலே!
உயிர்போன பின்புறவின் பலங்காண் பாயோ?
பட்டதடா தமிழ்மானம்! தமிழெ ழுத்து!
பாடைவரை போனதடா தமிழன் பண்பு!
கெட்டதடா பழம்பெருமை! இன்னு மாநீ
கேடுகெட்ட ஒற்றுமைக்குத் தலைய சைப்பாய்!

அகரமுத லெழுத்தெல்லாம் மறைந்து போகும்!
அரைவேக்கா டானமொழி எழுத்து நல்கும்!
பகரஒணுக் கொடுங்கோன்மை வலியில் லாமல்
பாய்கிறதே தமிழ்மகனே அறிக்கை மூலம்!
சிகரமிசைப் பறந்தகொடி சிதையும் வேளை
சீறிஎழும் தமிழ்மானம் எங்கே எங்கே?
நகரவிடா தேள்வானைக் காத்தில் தூக்கு?
நாய்க்குலத்தின் குருதியிலே தமிழ்கு ளிக்கும்!

'மித்திர'னும் தன்மானம் மிகப்ப டைத்தே
வேல்கொண்டு தாக்கியதே அறிக்கை தன்னை!
நித்திரையில் சுகங்காணும் தமிழா! நல்ல
நேரமிதே சிறைபோக! தயக்கம் வேண்டாம்!
இத்தரணி உள்ளவரை இந்தி நாயின்
இடுப்புவலி மாருமல் உதைத்தா லன்றி
கத்திரியால் வெபகவரும் கள்வ னைப்போல்
காசினியை அந்தமொழி கவர்ந்தே செல்லும்!

பண்பட்ட நல்லமொழி புகுந்த தென்ருல்
பலபொருளும் கற்ருேங்கும் பயனுண் டாகும்!
கண்கெட்ட மூடமொழி ஆள வந்தால்
கைக்கோலும் நாம்தந்து காத்தல் வேண்டும்!
மண்பட்டு மக்கியதோர் எலும்பைத் தூக்கி
மடியேற்றி வைத்தால்நீ கொஞ்சு வாயோ!
புண்பட்ட மேனியிலே வேலும் பாய்ந்தால்
பொருத்தருளல் 'சிறப்'பல்ல; பேடித் தன்மை!

வழக்கறிஞர் ஆங்கிலத்தோ டிந்தி கற்றே
வந்தால்தான் வாதாட முடியும்! நீதி
பிழைக்கவரும் அதிபதிகள் தீர்ப்புக் கூறப்
பிழையின்றி அம்மொழியைக் கற்றல் வேண்டும்!
இழிசெயல்கள் புரிகின்ற குற்ற வாளி
இந்திபடித் தேகுற்றம் செய்தல் வேண்டும்!
அழைக்கிறதே அறிக்கை! அட! நீயும் இந்தி
அறிந்தால்தான் பதவியிலும் அமர்தல் கூடும்!

கல்லடியால் நாய்குலைக்கும்! ஒலைக் கொத்தைக்
கட்டிவிட்டால் கழுதைகளும் கனைத்துப் பார்க்கும்!
வல்லபல அடிகளையும் வாங்கி வாங்கி
வாழ்கின்ற அமைச்சர்களே நாம்ப டைத்தோம்!
சொல்லதொரு நாவில்லை! தமிழர் கூட்டம்
சூட்டுக்கோல் தூக்காமல் பிழைப்ப தில்லை!
வெல்லமொழி வாழ்வுக்கு வழியி தேதான்
''வேல்தூக்கிக் கடுந்தாக்குத் தாக்க வேண்டும்''

''உரிமைக்கு வேங்கடத்தில் படுக்கை போட்டே
உறவுக்குத் தில்லிவரை குளிக்கச் செல்லும்''
திருவாளர் கூட்டத்தார் இன்னு மெங்கே
திரிகின்ருர்? அவர்களையும் கூப்பி டப்பா!
கருவாகி உயிர்க்கையிலே தமிழிற் பிண்டம்
கண்டவர்கள் அல்லேயோ! அவர்க ளின்றிப்
பெரும்போரை எவ்வண்ணம் துவக்க லாகும்!
'பேராளர்' தலைமையிலே தமிழைக் காப்போம்!

தமிழ்கற்ற பெரியோரே! அன்னை மாரே!
தன்மானத் தோழர்களே! 'ரஷ்யா' என்னும்
சுமைதாங்கிச் சலித்தோரே! தமிழ னுக்கும்
சூடுண்டாம் என்றுரைக்க நல்ல வேளை!
அமைவான போராட்டம் நடத்த வாரீர்!
அதற்கும்இவர் அசையார்என் ருகி விட்டால்
இமைமூடித் திறவாமுன் வடவர் நாட்டை
இடுகாடாய் ஆக்கிடுவோம்! தமிழைக் காப்போம்! ★

# எஸ்.ஏ.பி.

## 5

சிறிது தூரத்திலிருந்த சாயாக் கடையில் வாழைப்பழம் வாங்கிக்கொண்டிருந்தாள் அஞ்சலை. வடிவேலுவின் குரலைக் கேட்டு ஓடிவந்தாள். அவன் பயம் தெளிந்தது. அந்த நடைபாதையிலேயே அவளை உட்காரவைத்துத் தானும் உட்கார்ந்தான். இரவு போவதே தெரியாமல் இருவரும் பேசினார்கள். எந்தக் கடமைக்காக இருவரும் கணவன் மனைவி ஆனார்களோ, அந்தக் கடமையின்படி துன்பத்தைப் பங்கிட்டுக் கொண்டார்கள்.

அவர்கள் பேசிக்கொண்டிருக்கும்போதே பொழுது விடிந்தது. வடிவேலுவுக்கு அன்று கடமை இல்லை; ஓய்வுநாள். அஞ்சலையைக் கூட்டிக்கொண்டு, புத்தூருக்குப் புறப்பட்டான் வடிவேலு. தன் மகனைப் பார்க்கப் போகிறோம், பல ஆண்டுகளுக்குப் பிறகு முத்தமிடப் போகிறோம் என எண்ணி எண்ணி, அவன் மனது பூரித்தது. பஸ்ஸில் அஞ்சலையின் அருகில் நெருங்கி உட்கார்ந்திருந்தான். மற்றப் பிரயாணிகளையெல்லாம் அவன் கவனித்தான். பெரும்பாலானவர்கள், ஜோடி ஜோடியாகவே அமர்ந்திருந்தார்கள். ஒரு கிழவர், தன் கிழமனைவியிடம் சிரித்துப் பேசிக்கொண்டிருந்தார். அவர்களைப் பார்த்த வடிவேலுவுக்கு ஒரு எண்ணம் தோன்றிற்று. இவர்களில் யாரும் தன்னைப்போல், மனைவியைவிட்டு நெடுநாட்கள் பிரிந்திருக்கமாட்டார்கள். அருகிலேயே இருந்தும் ஆசை குறையாமலேயே இருக்கிறதே! அவனுக்கு ஒரு வெறி உணர்ச்சி உண்டாயிற்று. மண் வெட்டியாவது பிழைக்கலாம். மனைவியோடும், மகனோடும் வாழலாம்; எஸ். ஏ. பி. உத்தியோகமே வேண்டாம் என்று முடிவுகட்டினான். இந்த முடிவு அவனுக்கு ஒரு தைரியத்தையும் அளித்தது. இவ்வளவு பேரும் உலகத்தில் பிழைக்காமலா போய்விட்டார்கள்? சில நாட்கள் தொல்லை ஏற்படத்தான் செய்யும். பொறுத்துக் கொள்ளலாம். கல்யாணம் பண்ணி, கடைசியாகப் பிரமச்சாரியாக வாழ்வதைவிட, கொஞ்ச காலமாவது இன்பமாக வாழ்ந்து இறந்துபோகலாம். நன்றியில்லாத அரசாங்கத்துக்கு உழைத்துக் கொட்டித்தான் என்ன பயன்! எந்த நேரத்தில், எந்தப் புரட்சிக்காரனால் உயிர் கொத்திக்கொண்டு செல்லப்படுமோ தெரியாது! ஆபத்தான வேலை. அரைவயிற்று உணவு. காதல் சுகமும் கிடையாது. ச்சீ! போதும், போதும், இந்த வாழ்வு! பஸ்ஸிலே அவனுக்கு உண்டான ஞானோதயத்தை, இயற்கையான துடிப்பின்படி உடனேயே அஞ்சலையிடம் சொன்னான் வடிவேலு. அஞ்சலை அதைத் தடுக்கவில்லை. அவளும் அதைத் தானே எதிர்பார்த்தாள்!

'எப்படியாவது கொஞ்சநாள் கஷ்டப்பட்டு, சின்னையாவை நல்லா படிக்கவச்சிட்டா, அவன் நம்மளுக்குச் சோறு போடுவான். இப்பவே ரொம்ப துடிப்பா இருக்கான். நம்ம நெலமையைப் பாத்து, நல்லா படிச்சுக்குவான்' என்றாள் அஞ்சலை.

'நானும் அதைத்தான் நெனச்சுக்கிட்டிருக்கேன். வயித்தை வாயைக் கட்டியாவது, அவனை நல்லா வளத்துடுவோம். நம்ம சங்கரண்ணன் மகன்கூட இப்ப பட்டணத்தில பி. ஏ. படுச்சுக்கிட்டுருக்கான். இந்த வருஷத்தோட முடியுது. சங்கரண்ணனும்தான் எவ்வளவோ கஷ்டப்பட்டாரு. நாலு நாளைக்கு முன்னால், அந்தப் பையனை மௌண்ட்ரோட்டில கண்டேன். அடுத்த வருஷம் பட்டணத்திலேயே ஒருவேலை தேடிக்கிட்டு, அப்பாவையும் ஆத்தாளையும் கூட்டியாந்திறப் போறேன்னு சொன்னான். இனி அவங்களுக்கு என்ன கவலை?' என்றான் வடிவேலு.

'ஆமாம், மச்சான்! நான் அங்கயும், நீங்க இங்கயும் இருந்துக்கிட்டு உயிரை விடுறதைக் காட்டிலும், இதுதான் நல்லது. உலகம் இப்படியேவா போயிடும். நமக்கும் ஒரு நல்ல காலம் வரும். நானும் சித்தப்பன்கிட்ட கேட்டுப் பாக்கிறேன். படிப்புக்கு ஒதவி பண்றதுண்ணு, அவரும் சம்மதிப்பாரு' - என்றாள் அஞ்சலை.

'சின்னையா மூளைக்கு, படிப்பு நல்லா எட்டும்' என்றான் வடிவேலு.

'இப்பவே, ஆனா ஆவன்னா எழுதுறான். வீட்ல சொவத்தில எல்லாம் கரியால கிறுக்கி வச்சிருக்கான். கோழி முட்ட மாதிரி படத்தைப் போட்டு, 'இதுதான் எங்க அப்பா'ம்பான். 'நாளைக்குக் காலயில எங்கப்பா வந்திருவாரு'ம்பான். சினிமாவில வர்ர பாட்டையெல்லாம் எப்புடிப் படிக்கிறான். பக்கத்து வீட்டுப் பாப்பாயி மகன், படிச்சுப் படிச்சுப் பாப்பான், வராது. ஒரு பாட்டை ஒரு தடவை கேட்டான்னா, அப்புடியே திருப்பிப் படிக்கிறான். முத்துச்சாமி அண்ணன்கூடக் கேட்டுட்டு 'பய பெரிய ஆளா வருவான்'னு சொன்னாரு' என்றாள் அஞ்சலை.

ஏ கண்ணைகாசன்

வடிவேலு சிரித்தான். முன் சீட்டில் உட்கார்ந்திருந்த ஒருவர் திரும்பிப் பார்த்தார். 'சில புள்ளைகளுக்குக் கடவுள் கிருபை, அப்படித்தான் வாச்சுக்குது' என்றார் அவர். பஸ்ஸிலிருந்த ஒரு குழந்தை, தன் தாயோடு விளையாடிக்கொண்டே சிரித்தது. அஞ்சலையும், வடிவேலுவும் அந்தக் குழந்தையைப் பார்த்தார்கள். வடிவேலுவுக்கு இப்பொழுதே புத்தூர் சேர்ந்துவிடமாட்டோமா என்று தோன்றிற்று. சின்னையாவின் கால் முறிந்ததைப் பற்றி எண்ணியபோது, அவன் கண்கலங்கிற்று. இரவில் நடைபாதையில் கேட்ட கேள்வியையே மீண்டும் புதுப்பித்தான்: 'கால் நடக்கவரும்ணு டாக்டர் உறுதியாச்சொன்னாரா?'

'ஓ! டாக்டரும் சொன்னாரு, நர்சம்மாளும் சொன்னா. 'கொஞ்சம்நாள் புடிக்கும் அவ்வளவுதான்' அப்புடிண்ணுங்க' என்றாள் அஞ்சலை.

'அப்ப அதுவரைக்கி புத்தூர்லதான் இருந்தாகணும்...'

'ஆமா.'

'அப்ப ஒண்ணு செய்யலாம். தம்பிக்குக் காலு சரியாகிற வரைக்கி, இந்த வேலையிலயே இருக்கிறேன். இப்பத்தான் நாகாமலைக்குப் போறது இல்லைண்ணு முடிவாயிருச்சி. மலபார் போலீஸை அனுப்பிச்சிட்டாங்க. நீ புத்தூர்லயே இரு. தம்பியை பத்தரமாப் பாத்துக்க. பட்டணத்தில ஒரு நூறு எரநூறுவது கடன் பெறட்றதுக்குப் பாக்கிறேன். ரெண்டு நாளைக்கு ஒருநாள் ஓய்வு கெடைக்கும். அப்போ புத்தூருக்கு வந்துர்ரேன்' - என்றான் வடிவேலு.

சம்மதத்திற்கு அறிகுறியாக அஞ்சலை தலையாட்டினாள். உயிருக்குயிராகக் கலந்திருந்த அந்தத் தம்பதிகள், தங்கள் எதிர்காலத்தை இவ்வளவு ஒழுங்காகத் திட்டமிட்டுக்கொண்டார்கள். இந்தத் திட்டத்திலேயே மிகுந்த மகிழ்ச்சியைப் பெற்றார்கள்.

இருவரும் புத்தூருக்கு வந்து சேர்ந்தார்கள். ஆஸ்பத்திரிக்குள் நுழையும்போது, வடிவேலுவின் இதயம் படபடத்தது. பிள்ளைப் பாசம் அவன் கால்களை வேகமாக நடக்கவைத்தது. திடீரென்று 'அப்பா!' என்று ஒரு குரல் கேட்டது. அஞ்சலையும், வடிவேலுவும் சடக்கென்று திரும்பிப் பார்த்தார்கள். யாரோ ஒரு குழந்தை தன் தந்தையை அழைத்த குரல் அது. அவர்கள் திரும்பி, நடந்தார்கள். ஆஸ்பத்திரி வார்டுக்குள் நுழைந்தார்கள். முன்பு அஞ்சலையிடம் அனுதாபம் தெரிவித்த நர்சு, அங்கே நின்றாள். அவளைப் பார்த்து அஞ்சலை, ஆர்வத்தோடும், ஆவேசத்தோடும் 'நர்சம்மா! என் மகன் எங்கே இருக்கான்?' என்று கேட்டாள். பதில் சொல்ல வேண்டிய நர்சு வாயடைத்து நின்றாள். அஞ்சலை இடைவிடாமல், 'ஏம்மா, ஏன் இப்படி திக்கறீங்க! எங்கே சின்னையா?' என்றாள். நர்சின் கண்களில் நீர்மல்கியது. அஞ்சலைக்குப் பாதி புரிந்தது. வடிவேலுவின் இதயம் துடித்தது. நர்சு தலைகுனிந்தபடி, 'ஒங்க பையன் இறந்துட்டான். ஒடம்பை ஐஸ் ரூமில வச்சிருக்கு' என்றாள். 'அம்மா!' என்று அஞ்சலை போட்ட சப்தத்தில் ஆஸ்பத்திரியே கிடுகிடுத்தது. வடிவேலுவும் கதறிவிட்டான். நர்சு, ஐஸ் ரூமைக் காட்டினாள். பைத்தியம் பிடித்த மாதிரி அஞ்சலையும், வடிவேலுவும் உள்ளே ஓடினார்கள். அங்கே துணியால் போர்த்தப்பட்ட சின்னையாவின் சடலம், விரைத்துக் கிடந்தது. அஞ்சலை அதன்மீது விழுந்து, முட்டி மோதிக்கொண்டு அழுதாள். ஆற்றுவாரின்றித் தேற்றுவாரின்றி வடிவேலுவும் புலம்பினான். ஆஸ்பத்திரியிலிருந்த நோயாளிகளில், எழுந்து நடமாடக் கூடியவர்களெல்லாம் அங்கே வந்து கூடிவிட்டார்கள். எல்லோர் கண்களிலும் நீர் பெருகியது. கைக்குழந்தை இறந்தாலும், முதுகிழவர் மாண்டாலும் கவலைக்கு அதிக உயிர் இருப்பதில்லை. மழலைபேசி மகிழ்வித்த குழந்தை இறந்தால் மறக்கவா முடியும்! அவர்களது ஓலத்தை யாரும் தடுக்கவில்லை. முழுக்க அழுதுதான் ஓய்ந்தார்கள்.

அந்த உள்ளங்களின் கனவு பொய்யாகிவிட்டது. கட்டிய கோட்டை, அடியோடு சாய்ந்துவிட்டது. எதிர்காலம் வெட்டவெளியாகிவிட்டது. பஸ்ஸிலே போட்ட திட்டம் பாதை மாறிவிட்டது. மனிதன் நினைப்பதை நடக்கவிடாமல் அடிப்பதால்தான், உலகத்துக்குத் தனி மரியாதை இருக்கிறது. உலக இயற்கை தன் மரியாதையைக் காப்பாற்றிக் கொள்ள, வடிவேலு-அஞ்சலையின் வாழ்க்கையைத் திசை திருப்பி விட்டுவிட்டது.

மகனின் மரணத்தால் கோழைத்தனத்தில் பதுங்கியிருந்த வடிவேலுவின் மனம், சிறிது சிறிதாகத் தெளிந்தது. அழுது அழுது தலையாடிப்போன அஞ்சலையை மெதுவாக அணைத்துக்கொண்டு 'அழுகாதே! இனி நான்தான் உனக்கு மகன்!' என்றான். 'மச்சான்' என்று கதறினாள் அஞ்சலை. அங்கேயே இரண்டு கடிதங்களை எழுதினான் வடிவேலு. ஒரு கடிதம் தன்னை வேலையிலிருந்து நீக்கிவிடும்படி எஸ். ஏ. பி. அதிகாரியைக் கேட்டுக்கொண்டது. மற்றொன்று தங்கள் நிலையைக்கூறி, அஞ்சலையை வழக்கிலிருந்து விடுவிக்கும்படி பூக்கடை சப்-இன்ஸ்பெக்டரைக்கேட்டுக்கொண்டது.

சின்னையாவைப் புத்தூரிலேயே புதைத்துவிட்டு, அஞ்சலையைக் கைத்துணையாகத் தாங்கிக்கொண்டு கிராமத்துக்குப் புறப்பட்டான் வடிவேலு. ஆம், புது மனதோடு, புதுத்தெளிவோடு அருகிலேயே இருந்தால் புதுக் குழந்தை பெற்றுவிடலாம் என்கிற நம்பிக்கையோடு! கொண்டு வந்தது பின்தங்கிவிட்டது; வந்தவர்கள் திரும்பிவிட்டார்கள்.

முற்றும்.

# வாழும் மொழியில் வாழா மொழி!

**பன்மொழிப் புலவர் கா. அப்பாதுரை, எம்.ஏ., எல்.டி.**

## 4

தமிழர் என்றும் இனவேறுபாடு, மொழி வேறுபாடு, நாட்டு வேறுபாடுகூடக் காட்டியதில்லை. இன்றும் காட்டுவதில்லை. 'யாதும் ஊரே, யாவரும் கேளிர்' என்றும், "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்" என்றும் அவர்கள் அன்று முதல் இன்றுவரை சொல்லாலும், கருத்தாலும், செயலாலும் கொள்கையாக மேற்கொண்டு நடப்பவர்களே. ஆனால் இந்த உயரிய கொள்கையைத் தகாத இடங்களில் – ஆதிக்க இடங்களிடமும் ஆதிக்க மொழிகளிடமும் காட்டியதனாலேயே, அவர்கள் இன்று நாடிழந்து, ஏடிழந்து, மொழியிழந்து, தன்மதிப்பிழந்து அடிமைகளுக்கும் கால்பிடிக்கும் கொத்தடிமைகளாக, நாடற்ற அகதிகளாகத் திரிய வேண்டியதாயிருக்கிறது.

மொழிப்பகைமை கூடாது என்று வடமொழிப் பற்றாளர் பொதுப்படையாகக் கூறினாலும், அவர்கள் உள்ளத்தில் கருதுவதும், வலியுறுத்தி ஆர்வமாக ஆதரித்துப் போராடுவதும் வடமொழி, இந்தி போன்ற ஆதிக்க மொழிகளையேயன்றி மற்ற மலையாளம், தெலுங்கு வங்காளி போன்ற மொழிகளையன்று. ஆதிக்க மொழிகள் தவிர வேறு எவற்றிலும் அவர்களுக்கு அவ்வளவு உள்ளார்ந்த பற்று ஏற்படுவதும் இல்லை. ஏனெனில் ஆதிக்கம் விரும்பும் இனத்தவராகிய அவர்களுக்கும் ஆதிக்க மொழிகளுக்கும் இன்றியமையாத் தொடர்பு, எப்போதும் உண்டு. அவர்கள் ஆதிக்கக் குழு நிலத்தை என்றும் ஆதிக்க மொழிகள் பேணுவதுபோல, தேசிய — அதாவது மக்கள் தாய்மொழிகள் பேண முடியாது. ஆகவே அவர்கள் எதிர்க்கும் பகைமை, ஆதிக்க மொழிப்பகை மட்டுமே. அந்த ஆதிக்க மொழிகளிலும் தங்கள் குழுநலத்துக்கு உகந்த ஆதிக்க மொழியாகிய வடமொழிப் பகைமையை அவர்கள் எவ்வளவு ஆர்வமாக எதிர்ப்பார்களோ அவ்வளவு ஆர்வமாக அக்குழுநலத்துக்கு அதே அளவு ஒவ்வாத பிறமொழிப் பகைமைகளை அவர்கள் எதிர்ப்பதில்லை. இதற்குச் சில சான்றுகள் காட்டலாம்.

ஆங்கிலம், இந்தியைப் போலவும், வடமொழியைப் போலவும் ஆதிக்க மொழியேயாகும். ஆனால் ஆங்கிலத்தின் ஆதிக்க அரசியல் ஆதிக்கம் மட்டுமே. ஆங்கிலமும் ஆரிய இனமொழியேயானாலும் அது இனம் கடந்து வளர்ந்துவிட்டது. ஆங்கில ஆட்சித் தொடக்கத்தில் வடமொழிப் பற்றாளர் ஆங்கிலக் கல்வியில் நெடுந்தொலை முந்திக்கொண்ட அளவுக்கு ஆங்கில ஆதிக்கமும், அவர்கள் குழுநலமும் இனநலமும் தற்காலிகமாக இணைந்தன. வடமொழிப் பற்றாளரே ஆங்கில ஆட்சியின் ஆட்சி வகுப்பாய் அமைந்தனர். ஆனால் ஆங்கிலம் நிலையாக அக்குழு நலத்துக்கும் இனவேறுபாட்டுக்கும் உதவவில்லை. பாமர மக்களில் பல்வேறு வகுப்பினரும் படிப்படியாக அதைக் கற்று ஆட்சி வகுப்பினரின் இடத்தில் சிறிது சிறிதாகப் பங்கு பெற்றனர். ஆங்கிலப் பற்று இந்தியப் பற்றாக எளிதில் மாறியதற்கும், இந்திக்கு வடமொழிப் பற்றாளரும், அவர்கள் தலைவர்களும், ஆச்சாரியாரான ஆட்சி வகுப்பின் தலைவரும் முந்திக்கொண்டு முனைத்த ஆதரவு தந்ததன் காரணம் இதுவே. இந்தி புதிய ஆட்சிமொழி. ஆங்கிலத்தில் முந்திக்கொண்டதுபோல அதில் வடமொழிப் பற்றாளர் எளிதில் முந்திக்கொள்ளமுடியும். அத்துடன் பெயரளவில் ஆரிய இனமொழியாகிய ஆங்கிலம் போலன்றி, அது நேரடியாக வடமொழித் தொடர்பும், உடையது. தவிர, தமிழை வடமொழி மயமாக்குவதைவிட அதை வடமொழி மயமாக்குவது எளிது. வடவர் ஏற்கெனவே வடநாட்டுப் பொதுமக்கள் கண்களிலும் பொடியைத் தூவிக்கொண்டு அதை விரைந்து செய்துவருகின்றனர். வடமொழி மயமான ஆட்சிமொழியின் ஆதிக்கம், தமிழையும் தென்னக மொழிகளையும் இன்னும் விரைந்து வடமொழி மயமாக்க உதவும். இக்காரணங்களாலேயே ஆங்கிலத்தை விட்டு விட்டோ, ஆங்கிலத்துடன் சேர்த்தோ இந்திக்கு அவர்கள் ஆதரவு தர விரைந்துள்ளனர்.

ஆயினும் இந்தியும் ஆங்கிலத்தைப்போல ஒரு தாய்மொழி. அது மட்டுமன்று. ஆங்கிலம் ஆங்கில நாட்டு மக்களுக்கே தாய்மொழி. ஆங்கில நாட்டுமக்கள் இந்தியருடனோ, தென்னக மக்களுடனோ போட்டியிடுபவர்கள் அல்லர். அப்போட்டியில் வடமொழிப் பற்றாளருக்கே முழு இடம் விட்டுவிடுபவர். தென்னகத்தில் முதன்மையும், இந்தியாவில் அதற்குகந்த சூழலும் இருக்கும்வரை ஆங்கிலேயருக்கு இந்தியரை அடிபணிய வைத்துத் தாம் அருகே கங்காணிகளாய் அதிகாரம் செய்து பசப்பி வாழ்வதில் அவர்களுக்குச் சிறிதும் தடை கிடையாது. ஆனால் இந்தி தொடக்கத்தில் ஆங்கிலம்போல அவர்கள் குழுநலம் பேணினாலும், நீடித்து வடமொழி ஆதிக்கத்துக்கும் உதவக் கூடுமானாலும், இந்தியாவிலேயே ஒரு பெரும்பான்மையான பகுதி மக்களின் தாய்மொழி ஆகும். ஆகவே அது நாளடைவில் தென்னக ஆதிக்கத்தில் வடமொழிப் பற்றாளர்களுடன் வடஇந்தியரும் போட்டியிட, போட்டியில் முந்திக் கொள்ள இடம் தந்துவிடும். இந்தியைத் தென்னகத்தில் புகுத்திய வடமொழிப் பற்றாளர் பெருந் தலைவர் சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியார் இதனை உணரத் தொடங்கியதன் பின்னரே இந்தி எதிர்ப்பாளராக மாறினர் என்பது குறிப்பிடத்தக்கது.

ஆங்கிலமும் வேண்டாம், இந்தியும் வேண்டாம்; வடமொழியே ஆட்சிமொழியாகட்டும் என்ற குரல் சுயராஜ்ய இந்தியாவில் வளர்ந்தே வருகிறது என்பதில் ஐயமில்லை. அவ்வளர்ச்சியின் அளவை நாட்டு மக்கள் இன்னும் சரிவர உணர்ந்து கொள்ளவில்லை. ஏனெனில் அது மூன்று தனித்தனிக் கிளைகளாக, தொடர்பற்றதாகத் தோற்றும் மூவேறு வடிவங்களில் இன்று வெறியாட்டமாடுகின்றது. இவற்றுள் முதல் கிளைதான் நேரடியாக வடமொழி இந்தியாவின் ஆட்சிப் பொது மொழியாக ஆகவேண்டுமென்ற கோரிக்கை. இதன் பரப்புச் சிறிதானாலும், இது கல்வி நிலையங்களிடையேயும் வடபுலப் பொதுமக்களிடையேயும் எதிர்பாராத, வெளிப்படையாகத் தெரியாத வளர்ச்சியடைந்து வருகிறது. அரசியல் கட்சியாகிய காங்கிரஸ் இந்தித் திட்டத்தில் கட்டுப்பட்டிருப்பதனால், இதற்கு நேரிடையான ஆதரவு தரவில்லை என்பதுண்மையே. ஆனால் திரைமறைவிலும், வெளிப்படையாகவும் இந்தியையே வடமொழி மயமான இந்தி ஆக்கி வருவதன் மூலமும், கல்வித்துறையிலும், கலைத்துறையிலும் வடமொழிக்குப் புத்துயிர் தரும் இயக்கங்களுக்கு ஆதரவு தருவதன் மூலமும் அது இரு வேறு துறைகளின்மூலம் வடமொழி ஆதிக்கத்துக்குக் கடைகால் வகுத்து வருகிறது.

வடமொழிப் பற்றுள்ளோர்கள் ஆதரவை எதிர்பார்த்து, அரசியலே நான்கு எழுத்துக்களைத் தமிழர்மீது புகுத்த முன்வந்துள்ள இன்றைய நிலை மேற்கூறிய அரசியலாரின் முகமூடிச் செயலின் ஒரு பகுதியேயாகும். அது மொழி, கலை, பண்பாடு இலக்கிய, இலக்கணத்துறைகளில் ஆதிக்கம் நாடி நீடித்து உலவி வரும் வடமொழிக்கும், அதன் புத்துருவாக அரசியலில் ஆதிக்கம் நாடிவரும் இந்திக்கும் வலுத்தந்து, தமிழ், தமிழர், தமிழினம், தமிழகம் ஆகியவற்றின் வலுவையும் உள்ளுரத்தையும், உயிர்ப்பாற்றலையும், வளர்ச்சியையும் கெடுப்பதாகும். தமிழர் தன் மதிப்பையே புண்படுத்துவதாகும். இத்தகைய நூலேணிக்கு அடிமையான உண்டை நூலை, விருந்தாளியாக வந்து வெளியேற்ற வகை செய்யும் ஒட்டக மூக்கைத் தமிழர் தம் முழு மூச்சுடன் ஒன்றுபட்டு எதிர்த்தாக வேண்டும். இன்றேல் அழிவுக் குழியில் மெல்லப் படியெடுத்து வைப்பவர்கள் ஆவர். (தொடரும்)

# ஆசிரியத் தோழருக்கு

இராசன்

## புதுமைப்பித்தன் கவிதைகள்

கே. ஆர். கல்யாணராமன் பி. ஏ.,
"மகரம்"

105, வேளாளர் தெரு
வேப்பேரி, மதராஸ்-7.
5-8-'57.

ஆசிரியர் கண்ணதாசன் அவர்களுக்கு,

வணக்கம். தங்களுடைய 'தென்றல்' 3-8-57 இதழில் 'கவிதையிலே காளான்கள்-புதுமைப் பித்தன்' என்ற தங்களுடைய கட்டுரையைப் படித்துப்பார்த்தேன். புதுமைப் பித்தனின் கவிதைகளை யார் புத்தகமாக வெளியிட்டிருக்கிறார்கள், யார் முன்னுரை எழுதியிருக்கிறார்கள் என்று எனக்குத் தெரியவில்லை. நீங்களும் குறிப்பிடவில்லை.

புதுமைப் பித்தன் சிறந்த சிறுகதை ஆசிரியர்தான். அவர் எழுதிய கதைகளின் கருத்து ஆபாச எல்லையை அடிக்கடி மிதித்தது உண்மை. நடை புரியாதது மேலும் உண்மை. இதில் அபிப்பிராய பேதம் உண்டு.

ஆனால் என்னைப் பொறுத்த வரை அவருக்குக் கவி எழுதவே வராது என்பது என் துணிவு. திரு. ரகுநாதன் எழுதிய புதுமைப் பித்தன் வாழ்க்கைப் புத்தகத்தில் அவருடைய 'கவிதைகள்' சிலவற்றைப் போட்டிருந்தார். அதைப் படித்து நான் திடுக்கிட்டிருக்கிறேன். தாங்கள் முன்வந்து கண்டித்ததைப் பாராட்டுகிறேன். புதுமைப் பித்தன் 'கவிதை' எழுத முன் வந்தது துரதிர்ஷ்டம். அதை வெளியிட்டது. அதைவிட......

அன்பன்,
"மகரம்"

★

ஆசிரியர் அவர்களுக்கு,

வணக்கம். 'தென்றல்'லின் ஆகஸ்ட்டு முதல் இதழ் கண்டு அகமகிழ்ந்தேன். புதுமைப்பித்தன் கவிதையை 'விளக்கும்' கட்டுரை 'கவிதை'யின் முறையை விளக்கிக் காட்டுகிறது. 'எண்ணத்'தில் 'மெல்லத் தமிழ் இனிச்சாகும்!' என்ற தங்களது கவிதை, பேடிக்கும் ஆண்மை பிறக்கும். அயர்ந்த உறக்கத்தில் ஆழ்ந்திருப்பவனும்கூட எழுந்துவிடுவான். 'தூங்கு! தூங்கு!' என்று சொல்லித் 'தூக்கப்பள்ளி எழுச்சி' பாடினாலும்கூட அவனது விழிப்புணர்ச்சியைத் தடைசெய்ய முடியாதென்று கருதுகிறேன்.

"பாண்டியவரின் வழிநீயா? இமயக் கோட்டில்
பறந்திருந்த துன்கொடியா? இலங்கை நாட்டை
ஆண்டவர்கள் உன்னவரா? கலிங்கர் மன்னை
அதிரடித்த துன்குலமா? கடல்கள் மூன்றைத்
தாண்டியவர் பரம்பரையா? புட்ப கத்தில்
சாவகத்தில் கொடிபோட்டான் பிள்ளையா நீ?"

கேள்விகளில் 'சூடு' நிறைந்திருக்கிறது. விண்ணையே இடித்துவிடும் — இமயத்தையே பொடியாக்கிவிடும் திறமை படைத்த தமிழன், தங்கள் கவிதை படித்து தனது பழம் புகழ்பெற்றுத் தலைநிமிர்ந்து வாழ்வான் என்ற தைரியம் எல்லையற்று உள்ளது.

"அமிழ்தென்பான் தன்மொழியை! அடுத்த நேரம்
அழகுமொழி 'சமஸ்கிருதம்' அதையும் சுற்றல்
கமழ்ந்திடுமே தமிழ்என்பான்! இந்தி வந்தால்
கனித்தமிழே வாழ்வு பெறும் என்பான்...!"

இவ்வரிகள் தமிழனின் தற்கால 'மொழி உணர்ச்சி'யை எடுத்துக்காட்டித் தலைகுனியச் செய்கின்றன.

தங்கள் அன்புள்ள
முரு. சேதுராமன், ஆவணிப்பட்டி.

# கேள்விப்பெட்டி

பன்மொழிப்புலவர் கா. அப்பாதுரையார், எம். ஏ., எல். டி.

பதில் தருகிறார்

இரா. சண்முகசுந்தரம், அருப்புக்கோட்டை.

பாணன் என்ற சொல்லுக்கு பெண்பால் பாணிவியா, பாடினியா? சொல்லின்மூலம் அறிய ஆவல்.

பாணன் என்ற சொல்லுக்குப் பெண்பால் பாடினிதான், பாணினி அல்ல. இரண்டிற்கும் பகுதி பாடு என்பதே. பண், பாணன் அதனுடன் தொடர்புடைய சொற்கள். 'ட'கர, 'ண'கர தொடர்பு இயல்பானது.

❀

பி. எல். நாராயணன், காரைக்குடி

செட்டிநாட்டிலிருக்கும் காவியார் கோயில்தான் சரித்திரங்களிலும், தேவாரத்திலும் 'திருக்காவப்பேர்' என வழங்கப்படும் ஊரா?

ஆம்.

❀

எம். கல்யாணசுந்தரம், மதுரை.

ஐயர், ஐயங்கார், சாஸ்திரி, சர்மா, குருக்கள் இவர்கள் எல்லோரும், பார்ப்பனர்கள் என்ற பொதுத் தலைப்பில் வருகிறார்கள். இவர்களுக்குள்ளேயே ஒருவருக்கொருவர் தீண்டாமை உண்டா?

ஐயர், ஐயங்கார், சாஸ்திரி, சர்மா போன்ற வகுப்பினர் எல்லோரும் பார்ப்பனர்கள்தான். அவர்களிடையேயுள்ள வேற்றுமை, தீண்டாமை என்ற அளவுக்குக் கிடையாது. மற்ற வகுப்பினரிடையே உள்ள வேறுபாடுகூட அவர்களிடையே இல்லை. ஏனென்றால் அவர்கள் வேறுபாடு மணஉறவு வேறுபாடு மட்டுமே. பந்தி உணவு வேறுபாடு கிடையாது. தவிர, தமிழர் அனைவரும் தமிழைத் தாய்மொழியாகவும், நாட்டு மொழியாகவும், மட்டுமன்றி, இனமொழியாகவும் கொண்டவர்கள். இந்தப் பார்ப்பனர்களோ, அனைவரும் சமஸ்கிருதத்தையே இனமொழியாகவும், பண்பாட்டு மொழியாகவும், சமய மொழியாகவும் கொள்வதனால் மற்ற வகுப்பினரிடமிருந்து, அம்முறையில் வேறுபட்டுத் தமக்குள் ஒன்றுபடுபவராவர்.

பார்ப்பனர்களிடையேகூட, சமய மொழியாக சமஸ்கிருதத்தைக் கொண்டாலும், பண்பாட்டு மொழியாக, இனமொழியாக அதைக் கொள்ளாத வகுப்பினர் உண்டு. இவர்கள் வைணவர்களிடையே தென்கலையாரும், அதுபோல குருக்கள், பண்டாக்கள் முதலிய பல வேறு வகைப்பட்ட பெயர்களுடையவர்கள். ஆந்திர நாட்டில் உள்ள அறுவேலிப் பார்ப்பனர்கள் அல்லது லௌகிகப் பார்ப்பனர்களும், கன்னட நாட்டு போற்றிகளும், மலயாள நாட்டு நம்பூதிரிகளும் இவர்களை ஒத்தவர்களே ஆவர். இவர்களுக்கும், மற்றப் பார்ப்பனர்களுக்கும் உள்ள வேறுபாடு வெளிப்படை இன்று அறியப்படா விட்டாலும் கிட்டத்தட்ட இன வேறுபாடே. ஏனெனில், அவர்களிடையே பந்தி உணவு வேறுபாடு உண்டு. மலையாள, கன்னட நாடுகளில் அவர்கள் தரம் உயர்ந்ததானாலும் ஆரிய மயமாக்கப்பட்டு விட்டார்கள். மற்ற இடங்களில் பிற பார்ப்பனர்களால் இன்னும் தாழ்வாகவே கருதப்படுகிறார்கள். ஏனெனில் அவர்கள் ஆரிய வேத மந்திரங்களை ஏற்காமல், பழைமையான ஆகம மந்திரங்களையே பின்பற்றுகின்றனர்.

❀

கரு. நாகப்பன், புதுக்கோட்டை.

(அ) கோவலன், கண்ணகி, பட்டினத்தார் முதலியோர், நாட்டுக்கோட்டை வணிக மரபினரைச் சார்ந்தவர்களா? இல்லையேல், இன்றைய எந்த வணிக மரபினரின் தோற்றமுறையினர் அவர்கள்?

(ஆ) தமிழ் ஊர்ப்பெயர்கள், பிற்காலத்தில் தலைகீழாக மாறியிருக்கின்றனவே, இவற்றை யாரேனும் வலிந்து மாற்றினார்களா?

(அ) பண்டைத் தமிழகத்தில் ஆரிய வருண முறையோ அல்லது இன்றைய சாதி முறையோ இருந்ததென்று கூறுவதற்கு எத்தகைய சான்றுகளுமில்லை. இன்றைய சாதிப் பெயர்கள் சில தொழில் பெயர்களாகவும், வேறுசில தொழில் சார்ந்த குடிமரபுப் பெயர்களாகவும், நிலைசார்ந்த குடிமரபுப் பெயர்களாகவும் நிலவின. கிழார் அல்லது வேளாளர், வணிகர், ஆகிய இரு வகுப்புக்களும் சங்க காலத்தில் தொழில் வகுப்புக்களாக மட்டுமே நிலவின.

இன்றைய நாட்டுக் கோட்டை வணிகரோ, அல்லது வேறு வணிக மரபினரோ கோவலன், கண்ணகி, பட்டினத்தார் ஆகியவர்களைத் தம் மூல முதல்வர் என்று கொண்டால் அதில் தவறு ஒன்றுமில்லை. ஏனென்றால் இன்று இவ்வெல்லா வணிகர்களும் தமிழர்களே. கோவலன், கண்ணகி, பட்டினத்தார் ஆகியவர்களும் தமிழர்கள்தான். ஆனால் இன்றைய வேறுபாடுகளிடையே அவர் முன்னோர்கள் நாட்டுக் கோட்டை வணிகரா, பிறவணிகரா என்று ஆராய்ந்து பூசலிடுவது, நம் சிறுமையை நம் முன்னோர்களிடத்தில் கொண்டு சேர்ப்பதேயாகும்.

நாட்டுக்கோட்டை வணிகரிடையே உள்ள பழக்கவழக்க மரபுகள், சொல்மரபுகள் சிலப்பதிகார முதலியவற்றில் காணப்படுகின்றன. இது அச்சார்பினர் வாதம். கோவலன் முற்பிறப்பில் எண்ணெய் வாணிகம் செய்ததாகச் சிலப்பதிகாரம் கூறுகிறது. இது மற்றொரு சார்பினர் வாதம். இவ்வாதங்களைவிட பண்டைத்தமிழ்ப் பண்பைப் பேணுபவருக்குச் சிறப்பும், இனி வளர்ப்பவருக்கு ஊக்கமும் அளிக்கப்படுதல் பயன்தருவதாகும். ஏனெனில் பண்டைத் தமிழ் வணிகர் கடல்கடந்து தமிழும், தமிழ் நாகரிகமும், ஆட்சியும் உலகில் பரப்பியவராவர். அது செய்ய முற்படாமல் அம்மரபு பற்றிய ஆராய்ச்சி செய்தல் சிறுமையுடையதேயாகும்.

(ஆ) ஊர்ப்பெயர்கள் இயல்பாக மாறுவதும் உண்டு. வலிந்து மாற்றப்படுவதும் உண்டு. அரசர்கள், தங்கள் பெயர்களால் ஊரையும், நாடுகளையும்கூடச் சோழர் காலத்தில் புதிதாகக் குறித்துள்ளனர். இவற்றுள் சில, அவர்கள் காலத்திற்குப்பின் வழக்கிழந்துள்ளன. மதுரை போன்ற நகரங்களுக்கு கூடல், ஆலவாய் முதலிய பல பெயர்கள், பல காலத்தில் வழங்கியிருந்தன.

பெயர்கள் இயல்பாக மாறினாலும், வலிந்து மாற்றப்பட்டாலும் இரண்டும் பற்றிய கவலை பொதுவாக மக்களுக்கு இருக்கமுடியாது. அது ஆராய்ச்சியாளர்களுடைய விளக்கப்பணி சார்ந்தது. ஆனால் வலிந்து மாற்றுபவர் நாட்டுக்கோ மொழிக்கோ, இனத்துக்கோ, பண்பாட்டுக்கோ மாறுபட்டவராய் இருந்தால், பொதுமக்களிடையேயும் நாட்டு, மொழிப்பற்றுள்ளவர்களிடையேயும் அவற்றைப் பற்றிய ஆராய்ச்சி மட்டுமன்றி, கவலையும் எழுதல் இயல்பு. அத்துடன் அறிவும், ஆக்கமும் நிறைந்த தமிழ் மொழிப் பெயர்கள் அவையற்ற அடிமைக்கால அயல்மொழிப் பெயர்களாக நிலவும்போது, புதிய மறுமலர்ச்சித் தமிழர்கள் அவற்றில் கருத்தைச் செலுத்துவது அவசியமாகின்றது. அது வரலாற்றுக்கும் தேசிய வாழ்வுக்கும் விளக்கம் தருவதுமாகும்.

❀

கா. கிருட்டிணன், மதுரை.

இளங்கோவடிகளின் பெயரான 'இளங்கோ' சிறப்புப் பெயரா, உண்மைப் பெயரா? சிறப்புப் பெயர் என்றால், உண்மைப் பெயர் என்ன?

சிறப்புப் பெயர் என்றே தோற்றுகிறது. உண்மைப் பெயர் தெரியவில்லை. துறவிகள் இன்றுகூட துறவறத்துக்கென்று தனிச் சிறப்புப் பெயர் இட்டுக்கொள்கின்றனர். விவேகானந்தருக்கு நரேந்திரர் என்று பெயர். அவர்கள் காலம் கழிந்துவிட்டால் இயற்பெயர் மறக்கப்படுவதும், சிறப்புப் பெயரே நீடித்து வழங்குவதும் இயல்பு.

## காய்ச்சல் போய்விட்டது!

மாவீரன் அலெக்சாண்டரிடம் புகழ்பெற்ற தளபதி ஒருவர் இருந்தார். அவர் பெயர் கோனஸ் சைக்ளாப். திடீரென்று ஒருநாள் சைக்ளாப் தங்கியிருந்த முகாமிற்கு ஒரு ஓலை வந்தது. தளபதியின் மகனுக்குக் கடுமையான காய்ச்சல் என்று அந்த ஓலையில் கண்டிருந்தது. தளபதி சைக்ளாப், அலெக்சாண்டரிடம் அனுமதி பெற்று சொந்த ஊருக்குப் பயணமானார்.

வீட்டில் நோயாளி மகன் தனியறை ஒன்றில் படுத்திருந்தான். தளபதி அந்த அறைக்குள் நுழையும்போது உள்ளே இருந்து அழகிய பெண்ணொருத்தி வெளியேறினாள். தளபதிக்கு ஒன்றும் புரியவில்லை.

அறைக்குள் சென்று மகனைப் பார்த்தார் தளபதி. மகன் சுகமாகவே இருந்தான்.

அப்போது, "அப்பா! என் காய்ச்சல் போய்விட்டது" என்றான் மகன்.

தளபதிக்கு எரிச்சல் வந்தது. அப்போது அவர், "ஆமாம்! நான் உள்ளே நுழையும்போது அது வெளியே போனதை நானும் பார்த்தேன்" என்றார்.

மகன் முகத்தில் இருள் சூழ்ந்தது.



— 2 —

# நான் எழுத்தாளன் ஆனேன்

கண்ணதாசன்

கொஞ்ச நேரம்தான் அப்படி இருந்தான். அவனது மான உணர்ச்சி குத்திக்குடைந்தது. உடனே எழுந்தான். கையில் பெட்டியைத் தூக்கிக்கொண்டு புறப்பட்டுவிட்டான். சமுதாயத்தில் பண வசதியற்றவனுடைய நிலையை அவன் முழுக்க உணர்ந்தான். காரிலே வருபவர்கள், காரிலே வருபவர்களைத்தான் கட்டித் தழுவுகிறார்கள். மாடியில் நிற்பவன், மாடியில் நிற்பவனோடுதான் சொந்தம் கொண்டாடுகிறான். வெள்ளாடை உடுத்தவன், வெள்ளாடை உடுத்தவனைப் பற்றித்தான் விசாரிக்கிறான். இருப்பவன் வேறு, இல்லாதவன் வேறு என்பதை நகரத்தின் ஒவ்வொரு தெருவும் அவனுக்கு உணர்த்திற்று. 'வரட்டும், வரட்டும்! நாமும் ஒரு நாளைக்கு வாழ்க்கைத் தரத்தில் உயர்ந்துவிட்டால், இந்தப் பணக்காரர்களைப் பார்ப்போம் ஒரு கை!' என்று எண்ணிக்கொண்டான். பிராட்வே திருப்பத்தில் திரும்பி, ஒரு உணவு விடுதிக்கு முன்னால் அவன் நடந்துசென்ற போது, திடீரென்று அவன் தோளிலே ஒரு கை விழுந்தது. திரும்பினான். அவனுக்குப் பழக்கமான ஒரு நண்பர் நின்று கொண்டிருந்தார். 'எங்கே இப்படிப் பெட்டியும் கையுமாகப் புறப்பட்டாய்?' என்று விசாரித்தார். 'சும்மா, ஏதாவது வேலை பார்க்கலாம், என்று வந்தேன்' என்று அவன் கூறினான். சந்திரமதியின் தாலி அரிச்சந்திரனுக்குத் தெரிந்த மாதிரி, அவனுடைய பசி அவருக்குத் தெரிந்ததோ என்னவோ, 'காப்பி சாப்பிடலாம், வா!' என்று அழைத்தார். அவனுக்கிருந்த பசியில், ஒப்புக்காக மறுக்கக்கூட அவன் தயாராயில்லை. அவரைப் பின்தொடர்ந்தான். சாப்பிட்டான். விடைபெற்றுக்கொண்டு வெளியேறினான்.

மாலைநேரம். இது சென்னைக் கடற்கரை. அப்பாடா! எவ்வளவு கூட்டம்! அவன் உடம்பில் இப்பொழுது தெம்பு துளிர்த்தது. கடற்கரையின் உள் வாயில் போய் அமர்ந்தான். சிந்தனை சிறகடித்துப் பறந்தது. நகரத்தில் மனிதர்கள் நெருக்கமாக வாழ்கிறார்கள். ஒருவரை ஒருவர் இடித்துக்கொண்டுதான் நடக்கிறார்கள். ஆனாலும், ஒருவருக்கொருவர் அறிமுகம் இல்லாமலேயே வாழ்கிறார்கள். 'சுயநலம் கூடாது! சுயநலம்கூடாது!' என்று வெகுகாலமாகச் சொல்லப்பட்டு வருகிறது. ஆனால், ஒவ்வொரு மனிதனுடைய இதயத்திலும், சுயநலமே முதலிடம் வகிக்கிறது. கடலை நோக்கி ஒரு குழந்தை வேகமாக ஓடினாள், அதன் தாய்தான் பின்னால் ஓடுகிறாள். மற்றவர்கள் வேடிக்கை பார்த்துக்கொண்டுதான் நிற்கிறார்கள். கருணை என்பது மனிதனுடைய இதயத்தில் சுயநலத்துக்கு அடுத்த இடத்தைத்தான் வகிக்கிறது. மெருகு கலையாத வண்டியிலிருந்து இறங்குபவன், தன்னை மற்றவர்கள் கவனிப்பதில் பெருமைப்படுகிறான். காலணாவைப் பிச்சைக்காரர்களுக்குக் கொடுப்பதானாலும், மற்றவர்கள் கவனிப்பதற்காகவே கொடுக்கிறான். ஆசைகளை அடக்க வேண்டுமென்ற உபதேசம் அவனி உள்ளளவும் நிறைவேறாது. ஆசைகளை அடக்கிக் கொண்டுவிட்டதாகக் காட்டுக்கு ஓடுகிற வேதாந்தியும், தான் ஆசைகளை அடக்கிக் கொண்டவன் என்பதைப் பிறர் காணவேண்டுமென்று ஆசைப்படுகிறான். ஏதோ ஒரு உருவத்தில், ஆசை அங்கேயும் ஆதிக்கம் வகிக்கிறது.

கடற்கரையில் தேங்காய், மாங்காய், பட்டாணி, சுண்டல் விற்றுக்கொண்டு வந்தார் ஒருவர். அழகான பட்டுப்பாவாடை கட்டியிருந்த ஒரு குழந்தை, அதைப் பார்த்துவிட்டு 'அம்மா! அம்மா! பட்டாணி! பட்டாணி!' என்று கத்திற்று. தன் ஆசையை அம்மாவிடம் குழந்தை தெரிவித்ததும், அந்தக் குழந்தையிடம் ஆசை வைத்திருந்த தகப்பனார், அதற்குப் பட்டாணி வாங்கிக் கொடுத்தார். அந்தப் பட்டாணியை அந்தக் குழந்தை தின்பதை, ஒரு பிச்சைக்காரக் குழந்தை பார்த்து ஆசையோடு கையை நீட்டிற்று. 'சீ! போ, அந்தப் பக்கம்!' என்ற கடுமையான குரல், தகப்பனாரிடமிருந்து வந்தது. அவன் இதைக் கவனித்தான். இரண்டு குழந்தைகள் ஒரு பொருளின் மீது ஆசை வைக்கின்றன. ஒன்று அதைப் பெற்றுவிடுகிறது; மற்றொன்று விரட்டப்படுகிறது. அவனுக்கு சமுதாய அடிப்படை புரிந்தது. முதலாளித்துவத்தைப் பற்றியும், பொதுவுடைமையைப் பற்றியும் தத்துவ முறைப்படி அறிந்துகொண்டவனல்ல அவன். ஆனால், கண்முன்னாலே சிறிய வடிவத்தில் அதை அவன் கண்டான். இதுதான் உலகமா? இருவேறு கூறுகள் தவிர்க்க முடியாததா? மேடும், பள்ளமும் இருந்துதான் தீருமா?

கிராமத்தில் அவன் வண்டிகளை நிறையப் பார்த்திருக்கிறான். அவன் தந்தையே பூரணி மாடுகள் பூட்டுகிற பெரிய வில் வண்டி வைத்திருந்தார். அந்த வண்டியின் இரண்டு சக்கரங்களும் ஒரே அளவில் இருந்தன. ஒரே அளவில் இருந்தால் தான், வண்டி ஒழுங்காக ஓடும். உலக வண்டியின் இரண்டு சக்கரங்களும் ஒன்றிற்கொன்று சிறிது கூடத் தொடர்பற்ற நிலையில் இருக்கின்றன. உலகம் என்னவோ ஓடிக்கொண்டுதான் இருக்கிறது! இந்தப் புதிரை யார்தான் தீர்த்து வைக்கமுடியும்!

அவன் உட்கார்ந்திருந்த இடத்திற்குச் சிறிது தூரத்தில், ஒரு இளைஞனும், இளம் பெண்ணும் அருகருகே அமர்ந்திருந்தார்கள். அவர்கள் கணவன் - மனைவி உறவு உடையவர்கள் அல்ல. இளம் பெண்ணின் கையிலிருந்த புத்தகக் கட்டு, இதற்குச் சான்று கூறியது. அவள் ஒரு கல்லூரி மாணவி. அவன் யாரோ! இருவரும் உற்சாகமாகச் சிரித்துப் பேசிக்கொண்டிருந்தார்கள். அவள் ஏதாவது சொல்லுவாள். அவன், அவள் தொடையில் ஒரு தட்டுத் தட்டிவிட்டுச் சிரிப்பான். ஒவ்வொரு தடவையும் இப்படியே செய்தான். அதில் என்னவோ அவனுக்கு ஒரு ஆசை! அவளும் அதை மகிழ்வோடு ஏற்றுக்கொண்டு, மேலும் மேலும் பேசுவாள். இந்தக் காதலர்களை அவன் கவனித்தான். இவர்களுக்குக் கவலையே இல்லையோ! எவ்வளவு மகிழ்கிறார்கள்! கவலை இருக்கிறதோ, இல்லையோ, பசி இல்லை! அது இருந்தால், காதல் இவ்வளவு உற்சாகமாக இருக்காது! அந்தக் காதலர்களிடத்தில் அவனுக்குப் பொறாமை ஏற்பட்டது. அவனும் காதலித்திருக்கிறான். ஆனால் இப்படியெல்லாம் பேசிக்கொண்டிருந்ததில்லை. நாடகம் கண்களிலேயே தொடங்கி, கண்களிலேயே முடிந்து, அவள்வேறொருவனுக்குக் கட்டப்பட்டு விட்டாள். கண்களோடு நிற்பதுதான் காதல் தத்துவம் என்று அவன் கருதி இருந்தான். ஆனால் கடற்கரையில் நடந்த காதல், அருகருகே இருந்து செயல்பட்டது, அவனுக்குப் புதுமையாகவும், பொறாமையாகவும் இருந்தது.

அவர்களைப் பார்வையிலிருந்து விலக்கிவிட அவன் விரும்பினான். எழுந்துபோய், கடல் அலை மோதும் இடத்திலேயே அமர்ந்தான். அவன் அமர்ந்திருந்த இடத்தின் இரு மருங்கிலும், ஏராளமான படகுகள், தோணிகள், கட்டுமரங்கள் கிடந்தன. அவை அவனது எண்ணத்தை ஈர்த்தன. ஒரு கட்டுமரத்தைத் தொட்டுப் பார்த்தான். புரட்டியும் பார்த்தான். இதில் ஏறிக் கொண்டா பரதவர்கள் கடலில் வெகு தூரம் போகிறார்கள்! உயிருக்கு உறுதி இல்லாமலா அவர்களது தினசரி வாழ்வு நடக்கிறது! ஒவ்வொருவருக்கும் எத்தனை குழந்தைகளோ! அவற்றைக் காப்பாற்றவும், வயிற்றை நிரப்பவும் இந்தக் கடினமான தொழிலை மேற்கொள்ளத்தான் வேண்டியிருக்கிறது. கரையில் நின்று பார்க்கும் போதே, கடல் எவ்வளவு பயங்கரமாகக் காட்சியளிக்கிறது! இந்தத் தமிழன், ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னாலேயே, கப்பலோட்டினான் என்பது பொய்யல்ல. துணிந்து அவன் கடலிலேயே பலகாலம் மிதந்திருக்கிறான். சிங்களம், புட்பகம், சாவகம் ஆகிய தீவுகள் பலவும் கண்டு வந்திருக்கிறான். இந்தத் துணிவு அவனுக்கு எப்படி வந்தது? வேறொன்றுமில்லை. உயிரையும் வாழ்வையும் பற்றி அவன் ஒரு முடிவுக்கு வந்திருக்கிறான்! சாவை, வாழ்விலேயே கண்டிருக்கிறான்: விட்டுவிட்டுப் போகுது உயிர், விட்ட உடனே உடலைச் சுட்டுவிடப் போகிறார் சுற்றத்தார் என்ற மெய் ஞானத்தை முழுமை பெற உணர்ந்திருக்கிறான். அவனுக்குத் துணிவு வந்து விட்டது. பரதவர்களும் அப்படித்தானே! ஒரு வேறுபாடு. பழந் தமிழன் புகழுக்காகத் துணிந்தான். புதுத் தமிழன் வயிற்றுக்காகத் துணிந்தான். சாவைப்பற்றிய பயம், ஓரளவாவது பழந் தமிழனுக்கு இருந்திருக்கலாம்! பரதவத் தோழனுக்கு அது வராது! கட்டு மரம் சட்டிக் கடலேறிச் சென்றால், செத்து விடுவோமே என்று பயந்து வீட்டிலேயே அவன் இருந்தால், பட்டினி அந்தச் சாவை வீட்டிலேயே கொண்டு வந்துவிடும்! துணிந்து இறங்காமல் வேறு என்ன செய்வது!

கடல் அலை, படபடவென்று கரையில் மோதுவதை அவன் கண்டான். ஒவ்வொரு தடவையும் உள்ளே போய்த் திரும்புகிற அலை, எதையாவது கொண்டு வந்து வெளியில் போடுகிறது. நண்டுகள், ஒருவகை நத்தைகள், சில வகைக் கிளிஞ்சல்கள், சங்குகள், தெறிபட்டு விழுந்த சில கட்டைகள் — எதையாவது கரைக்குக் கொண்டு வந்து சேர்க்கிறது. அறிவு என்பது என்ன? இதுதான்! படிக்கின்ற பொழுது உள்ளே போய், ஒரு புதுப் பொருளை வெளியே கொண்டு வந்து தள்ளுகிறது. அவ்வளவுதான்!

நல்ல நிலவொளி. வெண்ணிற நுரைகள் பொங்கிப் பொங்கிக் கரைக்கு வந்து சேருவதை, அவன் கவனித்துக்கொண்டே இருந்தான். பத்துப் பதினைந்து அடி உயரம்கூட அலை மேலே எழும்பிற்று. இவ்வளவு பெரிய அலைகளையா, சிறிய தோணிகள் கிழித்துக் கொண்டு செல்கின்றன! இல்லை! கடலின் கரைப் பகுதியைக் காட்டிலும் உட்பகுதியில், அலை மிகவும் தாழ்ந்திருக்

— 10-ம் பக்கம் —

# நூல் நயம்

## வட இந்திய யாத்திரை

பிரயாணம் செய்வது ஒரு கலை. சரித்திர காலத்திலிருந்து இன்றைய நவீன காலம் வரை பிரயாணத்தின் மதிப்புக் குறைந்ததில்லை. அந்த நாட்களில் வெளி நாடுகளிலிருந்து இந்தியத் துணைக்கண்டத்துக்கு வந்து சென்ற தூதர்கள் பலர். அவர்கள் செய்த பிரயாணங்கள் அவர்கள் இந்தியாவைப்பற்றித் தெரிந்து கொள்ளப் பயன்பட்டன. இந்தியத் துணைக்கண்டத்தாரும் அந்தப் பிரயாணிகளுடன் பழகி அவர்கள் நாட்டு விஷயங்களைத் தெரிந்து கொள்ள முடிந்தது. இந்நாளிலும், வெளிநாடுகளிலிருந்து, தூதுவர்கள், கலாச்சாரக் குழுவினர் வந்து போகின்றனர். 'மதத்தலைவர்களும்,' 'பக்த கோடி'களும், வடமொழிப் பற்றுளர்களும் தங்களது பிரயாணத்தை 'யாத்திரை' என்ற பெயர் சொல்லி அழைத்தனர் - அழைக்கின்றனர். ஆனால், யாத்திரை என்றால் பிரயாணம் என்று பொருள் கொண்டுதானோ என்னவோ இந்த நாலுக்கு 'வடஇந்திய யாத்திரை' என்று தலைப்புக் கொடுத்திருக்கிறார் நூலாசிரியர் **பகீரதன்**.

இந்நூல் உண்மையிலேயே வட இந்தியாவைப் பற்றிச் சரியாக அறிந்துகொள்ள உதவுகிறது. கல்கி இதழில் இதன் கட்டுரைகள் தொடர்ந்து வெளிவந்து கொண்டிருந்தபோதே பலரது மனதையும் கவர்ந்தன. காரணம், பல அப்பட்டமான உண்மைகள் தெரிந்தோ தெரியாமலோ கட்டுரைகளில் வந்து விழுந்திருப்பதனால்தான். அறிஞர் அண்ணா அவர்கள், இதைக் கண்ணுற்று, திராவிடநாடு இதழில் 'யாத்திரை' என்ற தலைப்பில் இந்த ஆசிரியரையும், அவர்தம் நூலையும் பற்றி அழகாக எழுதினார்கள்.

"அணைகள், தேக்கங்கள், ஆராய்ச்சிக் கழகங்கள், தொழிற்சாலைகள், ஆகியவைகளைக் கண்டுவர 'யாத்திரை' செய்கிறார் கல்கியின் கட்டுரையாளர். 'பாரதம்' பண்டிதருடைய பரிபாலனத்தில் எத்தகைய மகோன்னதமான நிலைமை அடைந்திருக்கிறது என்பதை காங்கிரசாட்சியைக் கண்டித்துப் பேசும் கெடுமதியாளர்களுக்கு விவரமாக, விளக்கமாக, பாடம் காட்டும் படங்களுடன், பரவசப்படச் செய்யும் புள்ளி விவரங்களுடன் எடுத்துக்கூறி அவர்களைத் திருத்தவேண்டும், நல்வழிப்படுத்த வேண்டும் என்ற 'சிலாக்கிய'மான நோக்கத்துடன் இந்தயாத்திரையை மேற்கொண்டார்.

"ஆச்சாரியாரின் மேற்பார்வையில் நடந்துகொண்டிருக்கும் ஏடு 'கல்கி'. எனவே அதிலே வெளியிடப்படும் கருத்துக்கள் காற்று வாக்கிலே போகக்கூடியவை என்று யாரும் அலட்சியப்படுத்திவிட முடியாது-கூடாது; காற்று எந்தத் திக்கிலே வீசுகிறது என்பதைக் காட்ட இக்கட்டுரைகள் பயன்படுகின்றன என்றும் கூறலாம்"—இவ்வாறு அறிஞர் அண்ணா அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

கதை எழுதலாம், கவிதை எழுதலாம், நாடகம் எழுதலாம். அவை சிறந்து விளங்கலாம். அவற்றின் சிறப்புக்குக் காரணம், அவற்றிலுள்ள கற்பனை வளம் என்றுதான் சொல்லவேண்டும். ஆனால், உண்மை நிகழ்ச்சிகளை - உண்மை நிலைமைகளை-கண்ணுக்குத்தெரிந்த கட்டிடங்களை - நேரிலே கண்ட அதிசயங்களை - தொழிலை வளப்படுத்தும் தொழிற்சாலைகளை, நாட்டின் ஒரு பகுதியை மட்டும் வளப்படுத்தும் அணைக்கட்டுகளை-பெரிய மின்சார நிலையங்களை கட்டுரையில் கொண்டுவந்து நிறுத்தி, அவற்றைப் பற்றிப் படிப்பதிலே சுவை தோன்றச் செய்தால், உண்மையிலேயே,அந்தச் சுவைக்கு ஆசிரியரின் தனி ஆற்றல்தான் காரணம் என்று சொல்லவேண்டும். ஆசிரியர் கையாண்டிருக்கும் நடை உயிரோட்டம் உள்ளதாக இருப்பது குறிப்பிடத்தக்கது. ஆனால், கங்கை பிறந்த 'புராணக் கதையை' ஆசிரியர் தவிர்த்திருக்கலாம்.

'வடக்கு வாழ்கிறது; தெற்கு தேய்கிறது' என்ற உண்மையைச் சொல்பவர்களைக் கண்டு சிறி விழுபவர்கள், இந்த நூலைப் படித்து உண்மையைத் தெரிந்துகொள்ளலாம். வடஇந்தியாவைப் பற்றிய பூகோள விபரங்கள், வாழ்க்கை முறைகள் ஆகியவற்றைத் தெரிந்து கொள்ள விரும்புபவர்களும் இந்த நூலைப் படித்துத் தெரிந்துகொள்ளலாம். எல்லாத் துறையினரும் வாங்கிப் படிக்கவேண்டிய நூல் இது.

தெளிவில்லாத நெஞ்சங்களைத் தெளியவைக்கும் முயற்சியில் ஈடுபட்டுள்ள நூலாசிரியரையும், நல்லதொரு நூலை, நல்ல முறையில் வெளியிட்டுள்ள **கலைஞன் பதிப்பகத்தாரையும்** பாராட்டுகிறோம். நூலின் விலையைக் குறைத்திருந்தால் எல்லோரும் எளிதில் வாங்க இயலும் என்று கருதுகிறோம். எல்லோரும் படிக்கவேண்டிய நூல். படித்துப் பாதுகாக்கவேண்டிய நூல்.

எழுதியவர் : **பகீரதன்**

விலை ரூ. 5-0-0

வெளியீடு : **கலைஞன் பதிப்பகம்,**
தியாகராய நகர்,
சென்னை-17.

— 1-ம் பக்கத் தொடர்ச்சி —

அதை எழுதியவர் அவர்தான் என்பதற்குமேதான் என்று எவரேனும் கருதினுல் அவர்கள் அந்நிய மொழிக் குப்பை கூளங்களைத் தலையில் தூக்கிவைத்துக் கொண்டு கூத்தாடுபவர்களாவார்கள். தமிழகம் ஏந்திய முதல் நாவலே தகைமை சார்ந்ததாக அமைந்தது என்பதால்தான் அந்த நாவல், காலத்தால் அழியாத இலக்கியமாக. கருதப்படுகிறது என்பதை 'பிரதாப முதலியார் சரித்திரத்தை'ப் படிக்காதவர்கள் மனதிற் கொள்ளவேண்டும். கூத்துக் கலைஞன் ஷேக்ஸ்பியரின்படைப்பில், காதலுக்கு ரோமியோ ஜூலியத், கஞ்சனுக்கு ஷைலக், அஞ்சா நெஞ்சுக்கு ஹாம்லட் ஆகியோர் எவ்வாறு சாகாத சித்திரங்களாக விளங்குகிறார்களோ அதைப்போல் வேதநாயகரின் படைப்பில் பிரதாப முதலியார் ஒரு சாகாத தமிழ்க் கிழவன்.

ஏறத்தாழ எண்பதாண்டுகளுக்குமுன் வெளியான அந்த நாவல், சுடச்சுட இருக்கும் பலகாரத்தைப்போல் இன்றும் கிராக்கியாகவே இருக்கிறது. பள்ளிப் பாடப்புத்தகங்களிலே கூட அந்த நாவலின் ஒரு சில அத்தியாயங்கள் எடுத்தாளப்பட்டிருக்கின்றன என்றால் இதற்குமேல் அந்த நாவலுக்கு என்ன வேண்டும் சிறப்பு?

பிரதாப முதலியாரின் சரித்திரத்தைப் படிக்கும்போது, அது எண்பதாண்டு காலத்திற்கு முந்தி எழுதிய நாவலாக நமக்குப் படவில்லை. நடையிலே தெம்பு இருக்கிறது. நளினம் இருக்கிறது. அந்தக் காலத்து வசன நடையை முற்றிலும் தவிர்க்க முனைந்து பெரு வெற்றி கண்டிருக்கிறார் வேதநாயகர். இசைத்துறையில்-கீர்த்தனை அமைப்பில் தனக்கு ஒப்பாரும் மிக்காருமில்லை என்று வாழ்ந்த அவர், பெருங்கதை புனைவதிலும் அவருடைய காலத்தில் 'பச்சைக் கொடி' காட்டி கீர்த்தி பெற்று மறைந்திருக்கிறார்.

இது நாவல்கள் மலிந்திட்ட காலம். ஒரே ஆசிரியர் எழுதிய பத்துப் புத்தகங்கள் ஒரேநாளில் வெளிவருகின்றன. புத்தகத்தின் சாரத்திற் கிணைந்த புனைபெயரில் ஒளிந்துகொண்டு எழுதுகிறார்கள். ஆனால் வேதநாயகர் எழுதிய நூல்கள் மிகச் சில தான் என்றாலும் அவைகளில் எதுவும் வீண்போனதில்லை; சோடையானது கிடையாது. அவர், நாட்டுக்கும் மொழிக்கும் வளம்தேடும் வகையில் அவருடைய படைப்புகளுக்கு உயிர் கொடுத்திருக்கிறார்.

இரண்டு வாரங்களுக்குமுன் 'சக்தி' வை. கோவிந்தன் அவர்கள் நடத்திய 'பிரதாப முதலியார் சரித்திரம்' மலிவுப்பதிப்பு வெளியீட்டு விழாவில் கலந்துகொண்ட தலைவர் **அறிஞர் அண்ணா** அவர்கள் **'வேதநாயகர் வாழ்ந்தகாலம் அந்நிய ஆட்சி வேரூன்றத் தொடங்கிய காலம்'** என்பதை அழுத்தந்திருத்தமாகத் திரும்பத் திருப்பக் கூறினார்கள். 'என்ன அண்ணாதுரை இப்படிப் பேசுகிறார்?' என்று எத்தனையோ பேர் சலித்துக்கொண்டார்கள். வெள்ளையன் காலத்தில் எழுதப்பட்ட அந்த நாவலில் வேதநாயகர் அவர்கள் ஆதிக்க வெறி பிடித்தவர்களையும், மிட்டா மிராசுகளையும் பலமாகக் கண்டித்திருக்கிறார். ஆடம்பரத்தைச் சாடியிருக்கிறார். ஏன்? சில இடங்களில் கோயில் சிலைகளைக் கூடக் கேலி செய்திருக்கிறார். வேதநாயகரை வான்முட்டப் புகழ்ந்து, அவருடைய படைப்புகளை விலை மதிக்கமுடியாதவை யென்பவர்களில் எத்தனைபேர் வேதநாயகரின் நெஞ்சுரத்தைப் பின்பற்றுகிறார்கள்? இதைத்தான் சூசகமாக எடுத்துக்காட்டினார்கள் அண்ணா அவர்கள். வேதநாயகரைப்போல், கதையோடு காலத்தையும், மக்களின் மனவளத்தையும் மனதில் கொண்டு பெருங்கதை புனைய வேண்டும் என்று அண்ணா அவர்கள் இடித்துக்காட்டினார்கள். 'கலை கலைக்காகவே' என்று (பிடி)வாதம் செய்வதைப் போல் 'புத்தகம் புத்தகத்திற்காகவே' என்று நாவல் எழுதினுல் அது நாவலாகாது; எழுதியவர்களுக்குத் தலையணையாகவே பயன்படும் என்பதை அன்றையக் கூட்டத்தில் அறிஞர் அண்ணா அவர்கள் மறைமுகமாகச் சுட்டிக்காட்டினார்கள்.

ஆனால் வேதநாயகர் எல்லோராலும் பாராட்டத்தக்க – வைத்துப் பாதுகாக்கத்தக்க ஒரு புகழ் முத்தைப் படைத்துவிட்டுப் போயிருக்கிறார். அத்தகைய சிறப்புப்பெற்ற 'பிரதாப முதலியார் சரித்திரம்' தமிழில் வெளிவந்த முதல் நாவலாகவும், சிறந்த நாவலாகவும் விளங்குவது தமிழருக்குப் பெருமைதானே! ★

---

# வெண்பாப் போட்டி

## ௨

ஈற்றடி :

**பூச்சூடிப் போவாள் புறம்.**

முடிவு தேதி 24-8-57

தென்றல் வெண்பாப் போட்டி : : சென்னை - 6.

---



# வண்ணப் புருக்கள்

## சிறுகதை

சீறித்துக் கொண்டு ஓடும் கொள்ளிட நதியின் செழிப்பான கரையினிலே உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் சிறு கிராமம்—நாரணபுரம்! பூத்துக் குலுங்கும் புதுமலர்ச் சோலைகளும், வாசமலர்களைத் தாங்கிய புனல் 'வாவி'களும் அங்கே கண்களுக்கு நல்விருந்தாகும்!

செல்வச் செழிப்பிலே சிறப்பாக வாழுகின்ற குடும்பம் என்று கூற முடியாவிட்டாலும், நடுத்தரத்தைக் கடந்து நிற்கும் அந்த நல்ல குடும்பத்தில் **'மங்களம்'** ஒரு திருவிளக்கு! ஆமாம்; குழந்தைகளே இல்லாது இருண்டுபோய்க் கிடந்த அந்த வீட்டில் 'ஒரே' பெண்ணான மங்களத்தை அவர்கள் அப்படித்தான் கருதியிருக்க வேண்டும்!

எல்லோருடைய அன்பான அணைப்பிலும் வளர்ந்திருந்த அவளும், பருவம் கொழிக்கும் அழகு மங்கையாக—ஆடும் பூங்கொடியன்ன உடலும், அன்றலர்ந்த கமலமென முகமும், ஓடும் விழியில் ஒய்யாரக் கூத்தும், ஒயில் மயிலின் சாயலும் படைத்து நின்றாள்—என்றெல்லாம் வர்ணித்தாலும் இது அவ்வளவு அதிகம் அல்ல—அவள் அவ்வளவு அழகாகவே விளங்கினாள்!

கல்வியிலேயும்- கட்டுடலிலேயும் சிறிதும் தளராத **'சுந்தரம்'** அவளின் அண்டை வீட்டிலே இல்லாது போனாலும் அழகி இவளை அவன் பிடியிலே சிக்கவைக்கச் சந்தர்ப்பமும், சூழ்நிலையும் எப்படியோ... உறுதுணை புரியாமலா இருக்கிறது!

'அழகு' எங்கிருந்தாலும் அதை ஆராதிக்கலாம்! ஆனால் அது பெண்களிடம் இருந்துவிட்டால், அனுதாபமே அதற்கு நாம் தரும் பரிசு! எங்கெங்கோ இருக்கும் அழகையெல்லாம்விட மங்கையரிடம் இருக்கும் அழகு 'படும் பாடும்' —பிறரை அது படுத்தும் பாடுமே இதற்குச் சாட்சி! இந்த ஞானம் கூடப் பொதுவான நிலையில் தூர நின்ற அளவில் நமக்குப் பிறந்தது தான்! அழகின் அருகிலேயே நின்றுகொண்டிருப்பின், அனுதாப உணர்வு ஏது? அறிவுரைகள் தான் ஏது? அடிமை மனமும்- ஆராதனை மனோபாவமும் தலை தூக்கி நின்றல்லவா சதிராடும்!

அழகுப் பறவைகள் எழுப்பும் ஒலியும், நீரோட்டத்தின் 'சோ'வெனும் ஓசையும் ஒருசேர எழுந்து அலாதியான அமைதி தழுவிக் கிடக்கும் நதிக்கரையிலே, செழித்து வளர்ந்து உயர்ந்தோங்கி நிற்கும் நாணற்புதருக்கப்பால் விளங்கும் வெண்மணற்பரப்பின் தனிமையிலே—பருவத்தின் பூரிப்பிலே வட்டமிடும் இதயம் இணைந்த அந்தக் 'காதல் ஜோடி' பூங்கொம்பு பிணைந்த கொழுக்கொம்பாகக் காட்சியளித்ததில் நமக்கொன்றும் வியப்பில்லைதான்! ஆனால், சமுதாயத்தின் நல்லவர்கள்?

ஆமாம்; இந்தப் பட்டியலிலே அவர்களுடைய தாயும் தந்தையும் கூடச் சேர்ந்துவிடுகிறார்கள். அவர்களைக் குறைகூறி என்ன பயன்? உடம்பிலே வாலிபம் தங்கியிருக்கும் வரை மனிதன் தன் எண்ணங்களையும், செயல்களையும் தனது உரிமையின் படைப்பாக்குகிறான். வாலிபம் பழுத்துக் காய்ந்து உதிர்ந்ததும் அவனை வாழ்க்கையை நடத்துகிறான் என்பதைவிட, ஊரிலும் உலகத்திலும் உள்ள மனிதர்களே அவனை இயக்குகிறார்கள் என்பதே பொருந்தும்! அவனும் பிறரை இயக்கும் ஒரு கருவியாகவும் துணைசெய்து நிற்கிறான்!

இடையுறு சந்திப்பாலும், புதுமை வேகத்தாலும் இந்த உலகையே மங்களமும் சுந்தரமும் மறந்து நின்றார்கள்!

கடந்த ஒரு கிழமையாகவே துடியாய்த் துடிக்கிறான். தன் உயிரான மங்களத்தைக் காண முடியவில்லை அவனால்!

ஒரு நாள்! ஏங்கிப்போய்க் கிடந்த அவன் அவளைப் பார்க்கும் ஒரு சந்தர்ப்பம் வாய்த்தது! ஆனால், நெருங்கிப் பேச முடியவில்லை. அவளோ, இவனை ஏறெடுத்தும் பார்க்க முயற்சிக்கவில்லை. அவ்வளவு அலட்சியமா? இல்லை...வெறுப்பாக இருக்குமோ? பாபம் — அவளால்தான் எப்படி முடியும்?

அவள்தான் நறுமண மாலை சூடி, கைப்பிடித்த கணவனோடு மலரால் நன்கு அலங்கரிக்கப்பட்ட 'கார்' ஒன்றில் அருகருகே அமர்ந்தபடி தலையைக் குனிந்த நிலையில் அழகாய் பவனி செல்லுகிறாளே!

சுந்தரத்தின் நெஞ்சு வெடித்து விடும்போலிருந்தது! தான் காண்பது கனவா அல்லது நனவுதானா என்றே அவனுக்குப் புரியவில்லை!

"மங்களம் நன்றாகப் படித்த பெண்ணாயிற்றே...ஏன் இப்படித் தலையைக் குனிந்தவாறு செல்லுகிறாள்? ஒரு வேளை தன்னுடைய சுதந்திரத்திற்கு மதிப்பளிக்காத இந்த மனிதகுலத்தை அவள் ஏறிட்டும் பார்க்க விரும்பவில்லையோ! அல்லது தன் இதயத்தில் அழியாமல் சுடர்விட்டுக் கொண்டிருக்கும் என்னைத்தான் தன் நெஞ்சின் வழியாகக் காணுகிறாளோ?"—சுந்தரம் பலவாறு எண்ணினான். ஆமாம், அழகை ஆராதித்ததின் பலன்...! சஞ்சலப்பட்ட வாலிப உள்ளம் எதற்கும் தனக்குச் சாதகமாக ஒரு சமாதானத்தையல்லவா தேடிப் பிடிக்கப் பார்க்கிறது!

மங்களத்தின் இல்வாழ்க்கை சென்னை நகரத்திலே துவங்கிற்று! ஆரம்பத்திலே மலர்ச்சி பெறாத முகமும், அமைதி படியாத உள்ளமும் கொண்டிருந்தாலும், காலம் செல்லச் செல்ல இவைகளெல்லாம் இனி மாற்றமுடியாத ஒன்று என்றும்...எதுவுமறியாது களங்கமற்ற அன்பைச் சொரியும் கணவனை இன்பத்தில் திளைக்கச் செய்வதுதான் முறை. இனி முடியக் கூடியதுமாகும்... என்றெல்லாம் எண்ணினாள்! எண்ணியதைச் செயலில் காட்டவும் செய்தாள்!

மனைவியின் பெரும் மாற்றம் கண்டு மனம் மிக மகிழ்ந்து போனான். அவள் கணவன் சேகர்! பாபம்; சென்னையிலே பல ஆண்டுகள் வாழ்ந்தவன் என்றாலும், 'உள்ளதை உண்டு வயிறு நிறைந்திருந்தாலும், அப்போதே மேற்கொண்டு பழரச பானம் தேடும் அளவிற்கு எந்தப் பெண்ணையும் சென்னை உல்லாசியாக ஆக்கிவிடும் என்பதை உணராதவன் போலும்!

இல்வாழ்வில் இன்பம் கரை புரண்டோடியது! ஆண்டும் ஒன்று உருண்டு ஓடியது. மங்களம்—மூன்று மாதக் கர்ப்பிணி! கணவன் சேகரின் ஆனந்தம் அளவைக் கடந்தது!

இந்த ஓராண்டு, சுந்தரத்தின் வாழ்விலே பெரும் மாறுதலைச் செய்திருந்தது. படித்துப் பட்டம் பெற்றிருந்தவன் அவன். பல இடங்களுக்கு வேலை தேடி எழுதிப் போட்டிருந்தான். அதன் பயனாக ஒரு கம்பெனியில் வேலைக்கமர்ந்தான். ஆனால் அந்த வேலையும் மங்களம் வாழும், அந்தச் சென்னையிலேயா கிடைக்கவேண்டும்!

ஒரு நாள் காலை நேரம். மாடியில் இருக்கும் தன் அறையைப் பூட்டி விட்டுக்காரியாலயத்திற்கு விரைந்து கொண்டிருந்தான் அவன்! அவன் வசிக்கும் மாடிக்கு நேர் எதிர் வரிசையில் இரண்டு வீடுகள் தள்ளியவாறு இருக்கும் ஒரு வீட்டின் வெளிப்புறத் திண்ணையில் அழகான ஒரு பெண்- ஆமாம், 'மங்களம்' போன்றே சாயல்!

"சே! மங்களமாவது...இதே தெருவில் நமக்கருகிலேயே இருப்பதாவது? பரந்த இந்த சென்னையில் அவள் எங்கிருக்கிறாளோ...? எப்படியெப்படி வாழ்கிறாளோ...!!"—அவன் மனம் நிராசையுடனேயே பேசிற்று...!

அந்த வீட்டைக் கடக்கும்போது சுந்தரம் அந்தப் பெண்ணைப் பார்த்தான். எங்கேயோ பார்த்துக் கொண்டு நின்ற அவளும் இவன் பக்கம் திரும்பி நின்றாள்! இருவருமே திடுக்கிட்டுப் போய் நின்றனர். தன்னை வஞ்சித்த மங்களம் தான் அவள் என்பதை அறிந்து கொள்ள இவனுக்கும் அதிக நேரம் பிடிக்கவில்லை! அவளும் இவனை மறந்துவிடவில்லைதான்! எனினும் இந்த நிலையில் எங்கே தன் வாழ்வின் அமைதி கெட்டுவிடுமோ என எண்ணியபோது......அவள் நெஞ்சு நடுங்கியது!

மனம் நடுங்கும்-ஏற்படப்போகும் பயங்கரம் அத்தனையும் கண் முன்னே வந்துகொண்டேயிருக்கும்-நெஞ்சைப் பயம்கவ்வியபடியே இருக்கும்-இது துரோகம்-அநியாயம்-பாபம் என்றெல்லாம் மனம் பலவாறு எண்ணிக் கொண்டேயிருக்கும். ஆனாலும் தடையின்றித் தகாத காரியங்கள் அத்தனையும் நடந்துகொண்டேயிருக்கும்!! இது வாலிப அத்தியாயத்தின் உணர்ச்சி ஏடுகள் கூறும் விளக்கம்?

மாலை தன் அறைக்குத் திரும்பி வந்துகொண்டிருந்தான் சுந்தரம். மங்களம் குடியிருக்கிற அந்த வீட்டின் பின்புறத் திண்ணையின் மேல் தன் பார்வையை அலையவிட்டான். அவனையும் மீறி இது நடந்தது! அங்கே மங்களம் நன்றாக அலங்கரித்திருந்தநிலையில் இவனுக்காகவே காத்திருப்பவள்போல் நின்றுகொண்டிருந்தாள்...! ஒரு வேளை அவளையும் மீறி நடந்ததோ என்னவோ...?

கவனியாதவன் போல சுந்தரம் தன் பாதையிலேயே சென்றாலும் ஓரக் கண்ணால் அவளைக் காண முயன்றான்! சுந்தரத்தின் மனம் பொறுமிக் குதித்தது! "என்ன அழகு...! அப்பப்ப எப்படி அமைந்த உடம்பு!! அந்தக் கண்களில்தான் இன்னும் எத்தனை கவர்ச்சி...என்னென்ன குறும்பு!! ஐயோ-அவள் மாற்றான் மனைவி!" வேகமாக நடந்தான் முன்னைவிட!! அவன் அவளைக் கடக்கும் சமயம்...

"சுந்தர்...!"— மெதுவாகத்தான் அழைத்தாள் அவள்! அழைப்பிலே நாகரிகத்தின் முழக்கத்தோடு முன்னைவிட இனிமை அதிகம் இருப்பதாக உணர்ந்தான். திரும்பிப் பார்த்தான்-பின் அருகிலும் வந்து நின்றான்! இருவர் நிலையிலும் வேறு என்ன பேசிக்கொள்ள முடியும்?

"உள்ளே வாருங்கள்!"-அவள் அழைத்தாள்.

"உன்கணவர் வீட்டிலில்லையா?" பதிலுக்கு இவன் கேட்டான்.

"இல்லை வெளியூர் போயிருக்கிறார். நாளைக் காலைதான் வருவர்!"

"மங்களம்!"

"என்ன சுந்தர்!"

இருவரும் ஒருவரையொருவர் விழிகளால் அள்ளிப் பருகினர்!

அவன் இதயத்தின் மூலை முடுக்கெல்லாம் எதிரொலித்தன...

"மாற்றான் மனைவி!" மாற்றான் மனைவி!!

அந்த இடத்திலே அவனால் நிற்க முடியவில்லை. "வருகிறேன் மங்களம்" என்று கூறியவாறு அவ்விடத்தைவிட்டு அகன்றான்!

படியேறித் தன் அறையைத் திறக்கு முன் மாடியின் கைப்பிடிச்

**வையையார் கோமான்**

---

**மணிமாறன்**

தென்றல் உதவி ஆசிரியர் தமிழ்ப்பித்தன் அவர்களின் துணைவியார் 20-7-57 அன்று ஆண்மகவுக்குத் தாயானார். மகவுக்கு **மணிமாறன்** என்று பெயர் சூட்டப்பட்டது.

## நான் எழுத்தாளன் ஆனேன்

— 7ம் பக்கத் தொடர்ச்சி —

கும் என அவன் படித்திருக்கிறான். ஆழம் அதிகமிருந்தால் அலை அதிகம் சுருளாது. ஆமாம், நிறையப் படித்தவனுக்கும் படிக்காதவனுக்கும் உள்ள பேதம் தான்!

ஒரு அலைமூலம் மிகப் பெரிய நண்டு ஒன்று, கரையில் வந்து விழுந்தது. பயந்து அவன் எழுந்து நின்று விட்டான். நண்டு கரையிலேயே ஓடும் என்று அவன் எதிர் பார்த்தான். ஆனால், அது மீண்டும் கடலுக்குள்ளேயேஓடிற்று. கடல் அதை ஏற்றுக் கொண்டது. அவனுக்கு ஒரு நம்பிக்கை தோன்றிற்று. சமுதாயம் நம்மை வெளியில் தூக்கி எறிந்தாலும், நாம் மீண்டும் சமுதாயத்திற்குள்ளேயே ஓடித்தான் இடம் பிடிக்கவேண்டும். வெறுப்பினால் அல்ல அலை நண்டை வெளியே தள்ளியது. நண்டு சரியாக ஊன்றிக் கொள்ளாததனாலேதான், வெளியில் வந்து விழுந்தது. சமுதாயத்தில், ஒரு உயர்ந்த இடத்தில் காலூன்றி நின்று விடுவது என அவன் முடிவு கட்டிக் கொண்டான்.

வரவறியாமல் செலவிடுபவன் பொருள்போல கடற்கரைக்கு வந்திருந்த கூட்டம் கரைந்தது. ஒன்பது மணிக்கெல்லாம் கூட்டம் முழுவதும் மறைந்தது. அந்தச் ‘சிந்தனையாளன்’ மட்டும், அங்கேயே இருந்தான். கடல் ஒலியைத் தவிர, வேறு ஒலி இல்லை. அவன் மெதுவாக எழுந்து, பாதையை ஒட்டிய மணற்பகுதிக்கு வந்தான். ‘மெரினா’வின் உள் வாய் மின்சார விளக்குக்குச் சிறிது தூரத்தில் உட்கார்ந்து, கடல்மண்ணைத் தோண்டிப் படுக்கை தயாரித்துக் கொண்டான். பிணங்கள் மண்ணைத் தோண்டித் தாங்களே உள்ளே விழுவதில்லை. உயிரோடிருப்பவன் அப்படிச் செய்து பார்க்க முடிகிறது. தோண்டிய பிறகு, அந்தப் பள்ளத்தில் படுத்துக் கொண்டு, தலையணையாகப் பெட்டியைப் பயன்படுத்திக் கொண்டான். பசி இல்லை இப்போது! பயம் தோன்றிற்று. பாசம் ஆறுகப் பெருகிற்று. தாய் தந்தையர் நினைவு அவனை அலைக் கழித்தது. தாய்ப்பாசம், பிள்ளைப் பாசம் என்றெல்லாம் சொல்கிறார்களே, தெரியாமலா? பல ஆண்டு காலம் தாயின் அருகிலேயே இருந்து விட்டுப் பிரிந்திருப்பவனுக்குத்தான் அந்த வேதனை தெரியும். அவர்கள் எப்படித் துடிக்கிறார்களோ, என்று எண்ணி எண்ணித் துடித்தான். பிரிந்ததிலிருந்து கடிதமே எழுதாததால், அவன் மனம் படாதபாடு பட்டது. உடனே பெட்டியைத் தூக்கி வைத்துக்கொண்டு கடிதம் எழுத ஆரம்பித்தான். தன்னைப் பற்றி அவர்கள் கவலையே படாமலிருக்க வேண்டும், என்பதையே கடிதத்தின் முழுக் கொள்கையாக வைத்துக் கொண்டான். வேலை கிடைப்பதற்கான ஒரு வழியும் இல்லாத அந்த நிலையில், ‘நாளையே வேலை கிடைத்து விடும்’ என்று எழுதினான். கடிதத்தைப் படித்து, பெற்றோர் மகிழ வேண்டும் என்பதே அவனுடைய முக்கிய எண்ணமாக இருந்தது. எழுதி முடித்த கடிதத்தை, மீண்டும் அவன் பெட்டிக்குள்ளேதான் வைத்தான் என்றாலும், அது ஏதோ பெற்றோர் கைக்குக் கிடைத்து, அவர்கள் மகிழ்வது போன்ற ஒரு எண்ணம் அவனுக்கு ஏற்பட்டது. அவன் மீண்டும் குழியிலே சாய்ந்தான். கண்களை மூடினான். எதிர்காலத்தைப் பற்றிய கனவுகளில் ஆழ்ந்தான். அந்தக் கனவு, அவனை ஒரு மாளிகையில் வைத்திருக்கும் நேரத்தில், நிகழ்காலம் ஒரு தடியின் உருவத்தில் அவன் தலையில் தட்டிற்று. விழித்துப் பார்த்தான். ஒரு போலீஸ்காரர் நின்று கொண்டிருந்தார்.

- தொடரும் -

— 9ம் பக்கத் தொடர்ச்சி —

சுவரைப் பிடித்தவாறு தெருவை நோக்கினான். மங்களம் குடியிருந்த மல்லிகையின் பேரதை வாடை காற்றிலே மிதந்து வந்தது. அந்த நறுமணம் அவனுக்கும் அவளுக்கும் பாலம் அமைப்பதாகவே கருதினான். பாவம்! இளைஞன்! ஏமாந்தவனல்லவா!

அதிலிருந்து சுந்தரத்தின் போக்கிலே மாற்றம் காணப்பட்டது. கைதவறிய கனி கிடைத்துவிட்டதாகவே கருதினான். ஆனால் அவள்! பெண் உள்ளம் அண்டமுடியாததல்லவா?

சுந்தர் காலையில் அலுவலகம் போகும்போது ஜாடையாகப் பார்ப்பான். அவள் நிற்பது ஜன்னல் வழியே தெரியும். சிரிப்பான். மாலையிலும் அப்படியே! ஒவ்வொரு நாளைக்கு உள்ளே வந்து பேசிக் கொண்டிருப்பான். இப்படிப் பல நாள்.

அன்று சுதந்திர தினம். மாலையில் சுந்தர் மங்களம் வீட்டுக்கு வந்தான். அவள் வரவேற்றாள். கொஞ்ச நேரம் அளவளாவினார்கள். அப்போது யாரோ வாசற்படியேறி வரும் சத்தம் கேட்டது. சுந்தர் திடுக்கிட்டான். “வருகிறேன் மங்களம்” என்று சொல்லிவிட்டு ஓடினான். பளிங்குத்தரை! பாவம் சுந்தரை வழுக்கிவிட்டது. மண்டையில் பலத்த காயம்! எதிரே நுழைந்த சேகர் சுந்தரைத் தூக்கி நிறுத்தி ஆவன செய்து ஆஸ்பத்திரிக்கு எடுத்துச்சென்றான். டாக்டர் பயங்கரமான செய்தியொன்றைத் தெரிவித்தார். என்ன அது? ஆசாமிக்கு மூளை குழம்பிவிட்டது என்றார். சேகர் வீட்டுக்கு ஓடோடி வந்தான். மங்களத்திடம் செய்தியைச் சொன்னான். மங்களம் கவலைப்படவே இல்லை.

“என்ன மங்களம்! உன் மனம் என்ன கல்லா! உனக்குத் தெரிந்தவருக்கு இப்படி ஒரு ஆபத்து ஏற்பட்டிருக்கிறது, நீ பேசாமலிருக்கிறாயே” என்றான்.

“ஆமாம்! சுந்தரைப் பொறுத்தவரை என் மனம் கல்தான். ‘சுந்தர் சுந்தர்’ என்று ஒருவர் இருந்தார் என்று உங்களுக்கு முன்பொரு தடவை சொன்னேனே இவர்தான் அவர்! வெகு நாட்களுக்குப் பிறகு பார்க்கிறோமே என்று அன்பாகப் பேசினேன். ஆனால், நீங்கள் வருவதைப் பார்த்ததும் அவர் ஓட ஆரம்பித்தார். பிறகுதான் அவருடைய எண்ணம் எனக்குப் பட்டது. காதலிப்பது தமிழர் பண்பாடுதான்; ஆனால் அந்தக் காதல் கைக்கூடாதபோது பழைய காதலியைக் கெடுக்க எத்தனிப்பது தமிழர் பண்பாடல்லவே!” என்றாள்.

சேகருக்கு செய்தி புரிந்தது. கலங்கிய கண்களோடு மங்களத்தை முத்தமிட்டான்.

இருவரும் அண்ணாந்து பார்த்தார்கள். வானத்திலே இரண்டு புறாக்கள் பின்னிக்கொண்டு பறந்து கொண்டிருந்தன. ★

> ## முகவரி மாற்றம்
>
> ‘மன்றம்’ அலுவலகமும் எனது குடியிருப்பும் கீழ்க்கண்ட முகவரிக்கு மாற்றப்பட்டுள்ளன. என்னோடும் ‘மன்றம்’ அலுவலகத்தோடும் தொடர்புகொள்பவர்கள் இனி புதிய முகவரிக்கே தொடர்பு கொள்ளவும்.
>
> இரா. நெடுஞ்செழியன்
>
> புதிய முகவரி :—
>
> ‘மன்றம்’,
> 93, பிராட்வே சென்னை-1.







# கலங்கித் தவித்த ஜாரின் ஆசை

— 2ம் பக்கத் தொடர்ச்சி —

அச்சமயம் ரஷ்ய ஜார் சக்ரவர்த்தி அங்கேரிப் புரட்சியை அழித்தொழிக்க-ஆஸ்திரிய சர்க்காருக்கு துருப்புக்களை அனுப்பி உதவினார். ஆஸ்திரிய-ரஷ்ய ஆதிபத்திய கூட்டு அச்சு அங்கேரிப் புரட்சியை அடக்கியது.

அடக்கப்பட்ட புரட்சி அங்கேரியில் அன்றோடு அஸ்தமித்துப் போகவில்லை. குமுறும் நெஞ்சங்கள் சமயம் வாய்க்கும்போதெல்லாம் வெடித்துச் சிதறத்தான் செய்தன. பலமுறை சுதந்திரம் பெற்றும் இழந்தும் வந்த அங்கேரியை இறுதியாக—1938-ல் ஐக்கியநாடுகள்—அங்கேரி ஒப்பந்தமும், 1945-ல் நடைபெற்ற தேர்தலும் ரஷ்யாவின் கைப்பொம்மையாக்கியது. விடுதலை, உரிமை என்றெல்லாம் பல சாம்ராஜ்யங்களை எதிர்த்து வந்த அங்கேரியர் முடிவாக ரஷ்ய ஏகாதிபத்தியத்திற்கு அடிமைப்பட்டுப் போனார்கள். சுபிட்சம் வந்தும் சுதந்திரம் வராத நாட்டு வாழ்வு ஒரு வாழ்வா? அங்கேரியர் ரத்தம் கொதித்தபடியிருந்தது.

சிந்தனையாளர்கள், எழுத்தாளர்கள் பொங்கியெழுந்தனர். 1955-ம் ஆண்டில் சிந்தனையாளர்களின் எழுத்துக்களில் வேகம் பிறந்தது. சுதந்திரத்தீயின் அனல் கனன்றது. ரஷ்ய சர்வாதிகார ஏகாதிபத்தியத்திற்கு எதிராக எழுத்தாளர்களின் பேனாக்கள் சுழன்றன. நாடு முழுவதும் அவ்வெழுத்துக்களின் குரல் முழங்கிற்று. சர்வாதிகாரம் அந்த நல்லவர்களை, எழுத்தாளர்களை, சுதந்திர வீரர்களை கைது செய்தது. துள்ளி வந்த சுதந்திர வேல்களை அடக்குமுறை கவசத்தால் தடுத்து தற்காத்துக் கொண்டது ரஷ்ய ஆதிக்கம்.

அடிமைப்படு குழியில் விழுந்து தவித்த அங்கேரியர், 1956 ம் ஆண்டு அக்டோபர் மாத இறுதியில் துள்ளி எழுந்தனர். ரஷ்ய ஆதிக்கத்தையும், அதன் தாசர்களான அங்கேரிய கம்யூனிஸ்ட் அரசையும் எதிர்த்துப் போர் முழக்கம் செய்யலாயினர். அக்டோபர் மாதம் 22ந் தேதி பல்கலைக் கழக மாணவர்கள் 16 அம்சம் கொண்ட அறிக்கையை நாடு முழுவதும் பரப்பலானார்கள். அந்த அறிக்கையில் அங்கேரியர்களின் ஜீவாதாரமான உரிமைகள் அடங்கியிருந்தன. அங்கேரியில் இருக்கும் அந்நியப் படைகளான ரஷ்யப் படைகள் வாபஸ் வாங்கப்படவேண்டும்; இம்ரேநாகி தலைமையில் புது அரசாங்கம் அமைக்கவேண்டும்; சுதந்திரமான பொதுத் தேர்தல் நடத்த வேண்டும்; பேச்சு, எழுத்து சுதந்திரம் அளிக்கப்படல் வேண்டும்; கம்யூனிஸ்ட் கட்சி தவிர பிற அரசியல் கட்சிகள் இயங்க அனுமதிக்க வேண்டும் என்பன போன்ற உரிமைப் பிரச்சினைகள் எழுப்பப்பட்டன. அங்கேரியின் குமுறும் தன்மையை உணர்ந்த ரஷ்ய ஆதிபத்தியம் உஷாராகியது. சோவியத் படைகள் அங்கேரியின் எல்லைகளை அடைத்துக்கொண்டன. அங்கேரியர்களின் உரிமை உணர்ச்சி கட்டுக்கடங்காமல் பிறிட்டுக் கிளம்பியது. அங்கேரியின் தலைநகரான புடாபெஸ்டில் ஆர்ப்பாட்ட ஊர்வலங்கள் நடைபெறலாயின. போர்முழக்கம் சங்கநாதம் செய்தது. கிளை கிளையாக புடாபெஸ்ட் நகர வீதிகளில் உணர்ச்சி வயப்பட்ட மக்கள் பரவலாயினர். ஊர் நடுவிலிருந்த ஸ்டாலின் சிலையை ஒரு பகுதி மக்கள் ஆவேசமாகக் கவிழ்த்துவிட்டார்கள். கிளர்ச்சியின் வேகம் உத்வேகமடைந்தது.

அக்டோபர் 22ந் தேதி இரவு 9 மணிக்கு புடாபெஸ்ட் ரேடியோ நிலையத்தில் புரட்சி துவங்கியது. சோவியத் படைகள், கங்காணி ரகசியப் போலீஸ் முதலியன அங்கேரியர்களை மிருகத்தனமாகச் சுட்டுத்தள்ளி வெறியாட்டம் நடத்தின. அங்கேரி ராணுவம் வரவழைக்கப்பட்டது. வந்த ராணுவம் சொந்த மக்களோடு சேர்ந்து சோவியத் பட்டாளத்தை தாக்கலானது. ஆத்திரமும் ஆவேசமும் கொண்ட மக்கள் நிலைகெட்டுப் போராடலானார்கள். இரவு 2 மணிக்கு சோவியத் டாங்கிப் படைகளும், கவசமோட்டார் படைகளும் வந்து சேர்ந்தன. அன்று முதல் 5 நாட்கள் வரை அங்கேரி மக்களை அடக்கி ஒடுக்க ஏகாதிபத்திய ராணுவம் மிருகத்தனமாக வேட்டையாடலானது.

அக்டோபர் 25-ந் தேதி அன்று சோவியத் அரக்கப் படைகள் நடத்திய காட்டுமிராண்டித்தனமான தாக்குதலால் - அங்கேரி மக்களின் விடுதலை வெறி கட்டுக்கடங்காமல் போனது. புடாபெஸ்ட் நகரம் சோகத்திலும், ரத்த வெள்ளத்திலும் மிதந்தது.

அக்டோபர் 29ந் தேதி இம்ரேநாகி அரசாங்க தலைவராக நின்று விளக்கமான அறிக்கையை வெளியிட்டார். ‘அங்கேரி எந்த வல்லரசுடனும் சேராது நடுநிலைமை வகிக்கும். நவம்பர் 3-ந் தேதிக்குள் சோவியத் படைகள் அங்கேரியை விட்டு வெளியேறிவிட வேண்டும்’ என்று அறிவித்தார்.

பிறகு அங்கேரிய அரச தூதுக் குழுவும், ரஷ்ய ராணுவ அதிகாரிகளும் கலந்து சமரசம் மேற்கொள்ள ஏற்பாடாகியது. ரஷ்யக் குழுவினர் விருந்தில் அங்கேரிய தூதுக் குழுவினர் கலந்து கொண்டனர். நம்பி சமரசம் பேச வந்த குழுவினரை ரஷ்ய ராட்சச ராணுவம் வஞ்சித்தது. துரோகத்தின் எல்லைக் கோட்டில் துள்ளி நெளிந்தது ரஷ்ய ராணுவம். தூதுவர்கள் என்ற நிலையையும் மரியாதையையும் மறந்து, துறந்து அவர்களைக் கைது செய்து கண்காணாத இடத்திற்குக் கொண்டு சென்றுவிட்டனர் ரஷ்ய ராணுவத்தினர்.

சோவியத் படை முன்னறிவிப்பு ஏதுமின்றி புடாபெஸ்ட்டை வளைத்துப் பிடித்துக் கொண்டது. நாகியை நயவஞ்சகமாகப் பிடித்துக்கொண்டது. யூகோஸ்லேவியா தூதுவராலயத்தில் அடைக்கலம் புகுந்த அவரை ஒன்றும் செய்வதில்லை என்று ஒப்பந்தம் பேசி சோவியத்படை அழைத்துச் சென்றது. ஆனால் இன்று நாகி எங்கே? இருக்கிறாரா, இல்லையா? அங்கேரி வினவுகிறது. விக்குகிறது, விம்முகிறது. உலகமே ரஷ்ய ஆதிக்க வெறியைக் கண்டு கலங்குகிறது. கண்ணீர்சொரிகிறது.

ரஷ்யாவுக்கு அந்தரங்க சுத்தியான - தூய்மையான இருதயம் இருக்குமானால், அங்கேரி விஷயத்தில் தலையிட்டிருக்காது. ஏகாதிபத்திய ஆசை ரஷ்ய கம்யூனிஸ்ட் கட்சி ஆட்சிக்கு, உள்ளப் பூர்வமாக இல்லாமலிருக்குமானால்-போலந்து, அங்கேரி விஷயங்களில் நீதியோடு, நியாயத்தோடு நடந்து கொண்டிருக்கும்.

ஸ்டாலின் காலமுதலே சோவியத் ரஷ்யாவில் ஆதிக்கப் போட்டி இருந்து வந்திருக்கிறது. குருஷ்சேவ் காலத்தில் நடைபெற்ற-நடைபெறும் ஆதிக்கப் போட்டியின் விளைவுகள், கேட்கவும் அச்சம் விளைவிப்பனவாக இருக்கின்றன.

ஆதிக்க அதிகாரப் போட்டியில் தலைசிறந்துவிளங்கியவர் ஸ்டாலின். அவர் என்று ரஷ்யாவின் பிரதமர் பதவியை ஏற்றாரோ, அன்றுமுதல் மரிக்கும் வரை இழக்கவேயில்லை. ஜனநாயக நாடாக இருந்தால் எத்தனையோ பிரதமர்கள் மாறியிருப்பார்கள். கட்சி சர்வாதிகார ஆட்சியில் ஸ்டாலினின் கைப்பலம் ஓங்கியிருந்தது. தன்னைவிட அறிஞரும் புத்திசாலியுமான ட்ராட்ஸ்கியை முதன் முதலாக ஒழித்துக் கட்டினார் ஸ்டாலின் தனக்கு எதிரியென்று பட்டவரையெல்லாம் அழித்தொழித்தார்.

ரகசிய போலீஸ் எனும் பயங்கரப் படையை, ரஷ்ய சர்க்கார் வைத்திருக்கிறது. ஸ்டாலினின் நம்பிக்கையை பரிபூரணமாகப்பெற்றிருந்த ரகசிய போலீஸ் முதல் தலைவர் ‘யகோதா’ என்பவர். பிரக்யாதி பெற்ற மாஸ்கோ வழக்குகளை இவரே நடத்திவந்தார். பிரசித்தமான ஜினோவிவ், காமனெவ், டிராட்ஸ்கி ஆகியோரை ஒழித்தவர் இவர்தான்.

இவரின் முடிவோ பரிதாபமாக முடிந்தது. 1938-ம் ஆண்டு இவர் மீது ‘யகோவால்’ எனும் புதிய போலீஸ் தலைவனால் வழக்குத் தொடரப்பட்டது. இவர் அந்நிய அரசாங்கத்தின் கையாளாகவும், துரோகியாகவும் குற்றம் சாட்டப்பட்டார். மரண தண்டனை விதிக்கப்பட்டார்.

எந்த யகோவால் - யகோதாவை தேசத்துரோகி என்று குற்றஞ்சாட்டி தண்டனைக்கு உள்ளாக்கினாரோ, அவரே ஸ்டாலினால் துரோகி எனக் கருதப்பட்டு கொல்லப்பட்டார். அடுத்து, ‘பெரியா’ எனும் பெயர் பெற்ற ஒற்றர் தலைவன் ஸ்டாலினின் இடக்கரமானான்.

“எங்கள் உயிருக்குயிரான நேசனே! அருமைப் பிதாவே! ஞானாசிரியரே! ஸ்டாலின்...இக்கால மிகப் பெரிய விஞ்ஞானி” என்றெல்லாம் சோவியத் பூமி போற்றியது. ஆனால் ஸ்டாலின் மரணத்திற்குப்பின் அவரின் வலக்கரமான மாலென்கோவ் பதவியேற்றார். அவர் தனக்குப் போட்டியாளனான பெரியாவை தேசத்துரோகியாக்கிக் கொன்றார்.

அடுத்து, மாலென்கோவ் பதவி இழந்தார். புல்கானின் பதவியேற்றார். குருஷ்சேவ் நிர்வாக சூத்திரதாரியானார். ‘உயிருக்குயிரான நேசனே’ என்று புகழப்பட்ட ஸ்டாலினை, புல்கானின் - குருஷ்சேவ் கூட்டு அச்சு கடுமையாகத் தாக்கியது. லெனினிசத்தைக் காட்டிக்கொடுத்த துரோகி என்று ஸ்டாலினை அர்ச்சித்தனர். கொலைகாரன், கொடுமையாளன் என்று ஸ்டாலின் தூற்றப்பட்டார். தனி மனிதனுக்கு அளிக்கப்பட்டிருந்த அதிகாரங்களின் வினையே, ஸ்டாலினை சர்வாதிகாரியாக்கிற்று என்று குருஷ்சேவ் கடுமையான குரலில் கண்டித்தார்.

ஸ்டாலினின் நண்பர்கள் எனச் சொல்லி, மாலென்கோவ், மாலடோவ், ஷெபிலாவ், காகனவிச் போன்ற பெரும் தலைவர்களைக் கட்சியைவிட்டு விலக்கினர். பதவிகளைப் பறித்தனர். எடுபிடிகளாக மாற்றிவிட்டனர். நேற்று வரை தேவனாகவும், தந்தையாகவும் பூஜிக்கப்பட்டவர்களெல்லாம் - இன்று கொடியவனாகவும், கொலைகாரனாகவும் தூற்றப்படுகின்றனர்.

மன்னாதி மன்னர்கள் தங்கள் கீர்த்தி பரவ, பராக்கிரமம் பாரறிய ஏகாதிபத்திய நோக்கோடு ஆதிக்கம் செலுத்தினார்கள். சர்வாதிகாரிகள் தங்களின் ஏகபோக உரிமை ஆளப்பிறந்ததே என்று ஆய்கார ஓலமிட்டு உலகைஆட்டிப் படைத்தார்கள். முதலாளித்துவம் வளர்ந்துவரும் வேகத்தில், உலகை தன் நீண்ட வலுவான டாலர், ஸ்டர்லிங் எனும் ‘பணக்’கரங்களால் கட்டிப் பிடித்துக்கொள்ள முயல்கிறது. மார்க்ஸ் சித்தாந்தை எடுத்துக்காட்டி, லெனினிசத்தை விளக்கிச் சொல்லி, ஸ்டாலிசத்தை பழித்துக்காட்டி, கம்யூனிசத்தை ஜெபித்தபடி உலகைக் கபளீகரம் செய்ய ரஷ்ய ஏகாதிபத்தியம் வாய் பிளந்து நிற்கிறது.

1848-ல் ருஷ்ய ஜார் சக்ரவர்த்தி அங்கேரியை அடக்கி ஒடுக்க ஆஸ்டிரியாவுக்கு அனுசரணையாக இருந்தார்.

1956-ல் சோவியத் ரஷ்யா, தனது ஆதிபத்தியப் பிடியிலிருந்து பிரிந்து செல்லத் துணிந்த அங்கேரியை மாபெரும் கொடுமைக்கு ஆளாக்கியது.

1772-ல் போலந்தை ரஷ்யா, ப்ரஷ்யா, ஆஸ்டிரியா ஆகிய நாடுகள் பங்கு போட்டுக்கொண்டன.

1939-ல் ரஷ்யா, ஜெர்மன் கூட்டு அச்சு போலந்தை பங்கு போட்டுக் கொண்டது.

1941-ல ரஷ்யாவின் கைப்பொம்மையாக மாறியது போலந்து.

1956-ல் ரஷ்யாவின் உருட்டல் மிரட்டல்களுக்கு முன்பு எழுச்சி அடங்கிப்போனது.

ஜாரின் நிறைவேறாத ஆசைகளை சோவியத் சர்க்கார் நிறைவேற்றி வருகிறது. இதன் பொருள்-‘ரஷ்ய ஏகாதிபத்தியம்’ எனும் உறுதியை வலுப்படுத்துகிறது அல்லவா? ★

# கட்சியின்மூலம் உயிர்பெறும் கோலம்!

# தூ! தூ! தூ! இதுவா முற்போக்குச் சக்தி?

பதிவு எண்: எம். 6529




16 காசு — 17-8-57




## 1. பள்ளியறைக் குள்ளே பகை.

தேசத்தின் வாழ்வென்று திட்டத்தைக் காட்டியே
மோசமாய் ஆட்சியில் முன்னேற-நீசர்கள்
அள்ளித் தெளித்த வரியின் அநீதியால்
பள்ளியறைக் குள்ளே பகை.

-பா. நாராயணசுவாமி, கரந்தை.

★

கள்ளனவன் காலமொடு வந்திலனே என்றேநான்
உள்ளம் உருக்குலையக் காத்திருப்பேன்-மெள்ளவந்து
தள்ளி விளக்கணைப்பான் தாவுமடி ஊடலெனும்
பள்ளியறைக் குள்ளே பகை.

-கா. வேழவேந்தன், சென்னை-30.

★

பூமணக்கத் தேனைப் புசித்தக் கருவண்டு
காமணக்கப் பாடிக் களித்துவிட்டு-மாமணத்தில்
புள்ளிமான் வாடப் புனைமானைக் கொண்டபலன்
பள்ளியறைக் குள்ளே பகை.

-ப. கணபதி, சோழபுரம்.

★

மாமை நிறத்தழகி மையுண்ட கண்ணழகி
ஊமைபோல் மஞ்சத்தில் உட்கார்ந்தாள்-மாமன் தான்
கள்ளியவள் கன்னத்தைக் கிள்ளிப் புரிந்தானே
பள்ளியறைக் குள்ளே பகை!

-மு. ப. சாமி, கேர்பேட்டா.

★

நாணமெனும் நங்காயுன் நல்லாட்சி மெல்லியர்பால்
காணக் களிப்புடைத்து என்றும்-தேனமுதக்
கள்ளியுன் பேராற்றல் வெல்லாது மூட்டாதே
பள்ளியறைக் குள்ளே பகை.

-ப. முல்லைவழுதி, புதுக்கோட்டை.

★

பாலும் பழரசமும் பாக்கிட்ட வெற்றிலையும்
வேல்விழியாள் ஊட்ட விருந்துண்டு-மேலும்''எப்
பள்ளியிலும் கல்லாப் படிப்பூட்டும்'' போ(து)உறக்கம்
பள்ளியறைக் குள்ளே பகை.

-''புதுமதியன்'', திருவையாறு.

★

தென்றல் கனலூதடி! தீச்சொரியும் வானநிலா!
இன்றெனக்கு ஈந்திடடி இன்முத்தம்-இன்றுள்ளம்
துள்ளுமிளங் கன்றாய்த் துடிக்குதடி! வீண்!வீணே
பள்ளியறைக் குள்ளே பகை.

-தமிழன்பன், கரந்தை.

★

நாளும் திரைப்படத்தை நள்ளிரவில் பார்த்துவிட்டு
மீளுகின்றார்என்கணவர் மெல்லியலே!-நாளிரண்டு
தள்ளிவைத்து நானவரைத் தண்டிப்பேன்; இன்றிரவு
பள்ளியறைக் குள்ளே பகை.

-பா. இளங்கோ, கரந்தை,

★

கொட்டும் இதழ்ப்பசிக்குன் 'கூட்டுணவு' கேட்டுவர
சொட்டழகே! ஊடித்தொலைகின்றாய்-எட்டியதைத்
தள்ளிவிடு வேண்டாம்! சரியல்ல! ஏதுக்குப்
பள்ளியறைக் குள்ளே பகை.

— 'தேனரசன்', கரையாம்பாளையம்.

★

இன்பப் பெருக்கை இதயமெனும் வாய்க்காலில்
அன்புகலந் தோடவிட்டார் ஆசையால்-வன்புமனம்
கள்ளியெனக் கூறிக் கடிந்ததனால் வந்ததடா
பள்ளியறைக் குள்ளே பகை.

-ந. வள்ளுவதாசன், திருமயம்.

★

நீலமயில் சாயலினை நெஞ்சம் மறந்ததில்லை
கோலமிகும் பொற்சிலையே ஐயமேன்-பாலனைய
வெள்ளிநிலா வான்தழுவிக் கொஞ்சுதடி ஏனோகாம்
பள்ளியறைக் குள்ளே பகை.

-உமர், ஆரணி.

★

போர்க்களத்தில் பகைவர்தனைப் புறங்கண்டு வெற்றியொடு
கார்குழலி! உனைத்தழுவ கடுகிவந்தால்—சீர்பெற்றேய்!
உள்ளமதில் அன்பின்றி ஊடலுற்றாய்; நன்றாமோ
பள்ளியறைக் குள்ளே பகை.

-இரா. பெ. சாமி, பெங்களூர்-6.

★

பூவிரித்த மஞ்சமிது பொன்மயிலே என்கிளியை
நாவிரிக்க மாட்டாது நாணுகின்ற—நோவறிந்தும்
பள்ளிச் சிறுவன்போல் பாவைநீ ஊடுவதிப்
பள்ளியறைக் குள்ளே பகை.

-எல். இராமசாமி, கடையநல்லூர்.

★

செங்கோலில் வெங்கொடுமை செய்வதனை வேரறுக்க
எங்கள் திருவிடத்திற் கேற்றதொரு-பங்குதரும்
புள்ளிக் கணக்கினிலே பொல்லாங்கேன் என்றேமா
பள்ளியறைக் குள்ளே பகை.

-கோ. அ. முத்துராமன், திருவாரூர்.

★

கன்னத்தைக் கிள்ளிக் கனிவாகப் பேசியஎன்
மன்னவனை எண்ணி மனந்தாவும்—மின்னிருளில்
உள்ளம் பறக்கும் உடலோ வரமறக்கும்!
பள்ளியறைக் குள்ளே பகை.

-சோ. பா. இளங்கண்ணன், காரைக்குடி.

★

வள்ளுவர்சொல் இன்பமெல்லாம் வாழ்விற் சுவைத்திடவே
கள்ளமில்லாக் காதலால் நாடினேன்-கள்ளி! நீன்
உள்ளன்(பு) ஒளித்தூடு கின்றாய், நிலைக்குமோ
பள்ளியறைக் குள்ளே பகை.

-பா. பா. சோமநாதன், சென்னை-4.

★

தேன்பின் அருந்திய தீங்கனி காதலர்
தாம்பிணங்கா வின்பச் செறிவுகாண்-மான்விழியே!
கள்ளி நெருப்பணையத் தான்புகை உண்டுண்டோ
பள்ளியறைக் குள்ளே பகை.

-பா. வேலன், கோவை.

★

வேண்டாத மௌனம் விதவிதமாய் ஆளுகின்றாய்!
நீண்டபல ஞென்றுமில்லை நேரிழையே!-ஈண்டெமை
அள்ளி யணைத்திடுக, ஆர்வமுடன்! வேண்டாமிப்
பள்ளியறைக் குள்ளே பகை.

-மணவை. க. தங்கவேலன், திருவையாறு.

★

துள்ளுங் கயல்கொண்ட தூவிழியே! உன்னெஞ்சுக்
கள்வனென்று கண்டேநீ காதலித்தாய்;-வள்ளுவரின்
உள்ளக் கருத்தை யுணர்ந்த, நமக்கெதற்குப்
பள்ளியறைக் குள்ளே பகை.

-முத்துராமன், பொள்ளாச்சி.

★

காளைக்குச் சோம்பல் கடுங்கோபம் கண்ணயர்வு
வேளை யறியாமை வீணெண்ணம்—நீள்விழியாள்
கொள்ளும் மடமச்சம் பேதமை யெல்லாமாம்
பள்ளியறைக் குள்ளே பகை.

-அரங்க. வள்ளிநாதன், கரந்தை.

★

ஆணுக்குப் பெண்ணடிமை ஆதல் முறைமையென
வீணுக் குரைப்பதெலாம் வீம்பன்றோ?-காணுங்கால்
துள்ளியெழும் ஆடவரைச் சூழ்ந்தே அடக்கிவிடும்
பள்ளியறைக் குள்ளே பகை.

-சி. சிவராமலிங்கம், சென்னை-1.

★

மங்கைப் பருவத்தா ளென்றும் மாநிலத்தில்
தங்கொண் கணையிழந்த காரணத்தால்-இங்கவட்கு
நள்ளிரவின் வெண்ணிலவு நன்முல்லைத் தென்றலிவை
பள்ளியறைக் குள்ளே பகை.

-ச. மருதமுத்து, உடுமலைப்பேட்டை.

ஆசிரியர், அச்சிடுபவர், வெளியிடுபவர் கண்ணதாசன், ஏ. எல். எஸ். அச்சகம், 2-127, மவுண்ட் ரோடு, சென்னை-6. தமிழ்நாடு.

